# THE TAMUL

# *New Testament*

OF OUR

LORD AND SAVIOUR

# JESUS CHRIST.



நம்முடைய

கர்த்தரும் இரட்சகருமாகிய

# இயேசுகிறிஸ்துவினால்

உண்டான

கிருபையுள்ள உடன்படிக்கையாகிய

# புதுஏற்பாடு.

---

மூன்றாம் பதித்தல்.

---

சென்னப்பட்டணத்தில்

சர்ச்மிஷியோன் அச்சுக்கூடத்தில் பதிக்கப்பட்டது.

கிறிஸ்து பிறந்த ௲௮௱௨௪ ௵.



# மத்தேயு என்பவர்

எழுதின

# சுவிசேஷம்.



## க. அதிகாரம்.

க. ஆபிராமின சந்ததியாகிய தாவீதின சந்ததியாயிரு
க்கிற யேசுக்கிறிஸ்துவினுடைய வமிசவரிசையி
உ ன அட்டவணையாவது.—ஆபிராம ஈசாககைப்பெற
றான. ஈசாககு யாக்கோபைப்பெற்றான. யாககோபு
௩ யூதாமுதலான குமாரர்களைப்பெற்றான.—யூதா தா
மாரென்பவளைச்சேர்ந்து, பாரேசையுஞ் சாராமை
யும்பெற்றான. பாரேசு எஸ்ரோமைப்பெற்றான.—
௪ எஸ்ரோம ஆராமைப்பெற்றான. ஆராம அமினதா
பைப்பெற்றான. அமினதாபு நகசோனைப்பெற்று
௫ ன. நகசோன சலுமோனைப்பெற்றான.—சலுமோ
ன இராகாபென்பவளைச்சேர்ந்து, போவோசைப்
பெற்றான. போவோசு உரூத்தென்பவளைச்சேர்ந
து, ஒபேதைப்பெற்றான. ஒபேது ஏசேயைப
௬ பெற்றான.— ஏசே இராசாவாகிய தாவீதைப்பெற
றான. இராசாவாகிய தாவீது உரியாவினுடைய மனை
வியைச்சேர்ந்து, சொலொமோனைப்பெற்றான.—
௭ சொலொமோன ரெகொபோவாமைப்பெற்றான.
ரெகொபோவாம அபியாவைப்பெற்றான. அபியா
அசாவைப்பெற்றான.—அசா யோசபாத்தைப்பெற

றான். யோசபாத்து யோராமைப்பெற்றான். யோ
௯ ராம் ஒசியாவைப்பெற்றான்.—ஒசியா யோதாமைப்
பெற்றான். யோதாம் ஆகாசைப்பெற்றான். ஆகா
௰ ஸ் எசேக்கியாவைப்பெற்றான்.—எசேக்கியா மனாசே
யைப்பெற்றான். மனாசே அமோனைப்பெற்றான்.
௰௧ அமோன் யோசியாவைப்பெற்றான்.—(யூதர்கள்) பா
பிலோன தேசத்துக்குச்சிறைப்பட்டுப்போகுங்கால
௰௨ த்திலே யோசியா எகோனியாவைப்பெற்றான்.—அவர்
கள் பாபிலோனதேசத்துக்குச்சிறையாகக்கொண்டு
போகப்பட்ட பின்பு, எகோனியா சாலாத்தியேலைப்
பெற்றான். சாலாத்தியேல் சொரோபாபேலைப்
௰௩ பெற்றான்.—சொரோபாபேல் அபியூதைப்பெற்று
ன். அபியூது எலியாக்கீமைப்பெற்றான். எலியாக்
௰௪ கீம் அசோரைப்பெற்றான்.—அசோர் சாதோக்கைப்
பெற்றான். சாதோக்கு ஆகீமைப்பெற்றான். ஆகீம்
௰௫ எலியூதைப்பெற்றான்.— எலியூது எலெயாசாரைப்
பெற்றான். எலெயாசார் மத்தானைப்பெற்றான். மத்
௰௬ தான் யாக்கோபைப்பெற்றான்.—யாக்கோபு, மரியா
ளுடைய புருஷனாகிய யோசேப்பைப்பெற்றான்.
அந்தமரியாளிடத்திலே கிறிஸ்து என்னப்பட்டிருக்
௰௭ கிற ஏசு பிறந்தார்.--இவ்வண்ணமாய் உண்டான தலை
முறைகளெல்லாம் ஆபிரகாம்முதல் தாவீதுவரைக்
கும் பதினாலு தலைமுறைகளுந்தாவீதுமுதல் பாபி
லோனதேசத்துக்கு யூதர்கள்சிறைப்பட்டுப்போன
காலம்வரைக்கும் பதினாலு தலைமுறைகளும் பாபி
லோன தேசத்துக்குக்கொண்டுபோன காலமுதல்
கிறிஸ்துவரைக்கும்பதினாலுதலைமுறைகளுமேயாம்.
௰௮ இந்த ஏசுகிறிஸ்துவினுடைய உற்பத்தியின்விவ
ரமாவது, அவருடையதாயாகிய மரியாள் யோசேப்பு
க்கு (மனைவியாக) நியமிக்கப்பட்டபின்பு, அவர்கள்
கூடிவாழுகிறதற்கு முன்னமே அவள்பரிசுத்த ஆவி
௰௯ யினாலேகர்ப்பவதியென்று காணப்பட்டாள்.—அவ
ளுடையபுருஷனாகிய யோசேப்பு நீதிமானாயிரா
ல, அவளை அவதூறுபண்ணமனதில்லாமல், இரகசி
யமாய் அவளைத்தள்ளிவிடும்படியாய்நினைத்தா

௨௰ ன்.—அவன் அப்படி நினைக்கையிலே பராபரனு
டைய தூதன் அவனுடைய சொப்பனத்திலே காண
ப்பட்டுச் சொன்னதாவது, தாவீதின் சந்ததியாகிய
யோசேப்பே நீ உன் மனைவியாகிய மரியாளைச் சேர்த்
துக்கொள்ள ஐயப்படவேண்டாம். என்னத்தினா
லென்றால், அவளிடத்தில் உண்டாயிருக்கிறது பரிசுத்த
௨௧ ஆவியினாலே உண்டானது.—அவள் ஒரு குமாரனைப்
பெறுவாள். அவர் தம்முடைய சனங்களைப் பாவங்க
ளை நீக்கி அவர்களை இரட்சிப்பாராகையால், அவருக்கு
௨௨ இயேசுவென்று பேரிடுவாயாகவென்றான்.—தீர்க்கதரி
சியைக்கொண்டு பராபரன் சொன்னது நிறைவேறு
௨௩ ம்படிக்கு அவையெல்லாம் நடந்தன.—அவர் சொல்
லுவித்ததென்னவென்றால், ஒரு கன்னி கர்ப்பவதியா
கி ஒருகுமாரனைப்பெறுவாள். அவருக்கு இம்மானு
வேலென்று பேரிடுவார்களென்பதே. இம்மானுவே
லென்பதற்கு பராபரன் நம்முடனே யிருக்கிறா
௨௪ ரென்று அர்த்தமாம்.—யோசேப்பு நித்திரைதெளிந்
தெழுந்தபொழுது, பராபரனுடைய தூதன்தனக்கு
கட்டளையிட்டபடி, தன் மனைவியைச் சேர்த்துக்
௨௫ கொண்டு.—அவள் முதற்பேறான குமாரனைப் பெறு
மளவாக்கும் அவளையறியாதிருந்து, (அந்தக்குமாரன்
பிறந்தபின்பு) அவருக்கு இயேசு என்றுபேரிட்டான்.

## ௨. அதிகாரம்.

௧ ஏரோதென்னும் இராசனுடைய காலத்திலே, யூ
தேயாத்தேசத்திலுள்ள பெத்லேகேமூரில்
இயேசுவானவர் பிறந்தபின்பு, கிழக்குத்திசையிலிருந்
து சாஸ்திரிகள் எருசலேம்பட்டணத்துக்குவந்து.—
௨ (இக்காலத்திலே) பிறந்திருக்கிற யூதருடைய இராசா
வைக் குறித்துத்தோன்றிய நட்சத்திரத்தைக் கிழக்கி
லே நாங்கள்கண்டு, அவரைப்பணிந்துகொள்ள வந்
௩ தோம். அவரெங்கேயென்றார்கள்.—ஏரோதுஇராசா
அதைக்கேட்டபொழுது, அவனும் அவனுடனேகூ
ட எருசலேம்பட்டணத்தாரனைவரும் கலங்கினார்கள்.

௪ அல்லாமலும் அவன் சனங்களின் பிரதானமான ஆசா
ரியர் வேதபாரகரெல்லாரையுங்கூடிவரச்செய்து, கிறிஸ்
து எங்கே பிறப்பாரென்று அவர்களிடத்திலே விசாரித்
௫ தான். அவர்கள் அவனுக்குச் சொன்னதாவது, யூதே
யாத்தேசத்திலுள்ள பெத்லகேமூரே, நம்முடை
யசனங்களாகிய இஸ்ரவேலரை ஆளும்பிரபு உன்னிட
த்திலே தோன்றுவாரென்கையால் யூதாவிலுள்ள பிரபுக்
௬ களில் நீ சிறியதல்லவென்று. — தீர்க்கதரிசியினாலே
எழுதப்பட்டிருக்கின்றபடியால் யூதாவிலூராகிய
பெத்லகேமிலே அவர் பிறப்பாரென்றார்கள். —
௭ அப்பொழுது ஏரோது அந்தச் சாஸ்திரிகளை இரகசி
யமாய் அழைத்து, அந்த நட்சத்திரம் காணப்பட்ட
காலத்தைக்குறித்து அவர்களிடத்திலே விசாரித்துக்
௮ கொண்டு. — நீங்கள் போய், அந்தப் பிள்ளையைக்குறித்
து நன்றாய் ஆராய்ந்துபாருங்கள் மேலும் நீங்கள்
அதைக்கண்டபின்பு, நானும் போய் அதைப்பணிந்
துகொள்ளும்படிக்கு, எனக்கறிவியுங்களென்று
சொல்லி, அவர்களைப் பெத்லகேமூருக்கு அனு
௯ ப்பிவிட்டான். — இராசா சொன்னதை அவர்கள் கேட்
டுப்போனார்கள் (போகையில்) கிழக்கிலேயவர்கள்
கண்ட நட்சத்திரம் அந்தப் பிள்ளையிருக்கிற ஸ்தலத்
துக்குமேலே வந்து நிற்குமளவாகவும், அவர்களுக்
௰ குமுன்பாக நடந்தது, — அவர்கள் அந்த நட்சத்திரத்
தைக்கண்டு, மிகுந்த ஆநந்த சந்தோஷத்தையடைந்
௰௧ து, — பின்பு அந்த வீட்டிலே பிரவேசித்து பிள்ளையையு
ம் அதினுடைய தாயாகிய மரியாளையுங்கண்டு, சாஷ்
டாங்கமாய் அதைப்பணிந்துகொண்டு, தங்கள் பொ
க்கிஷப் பெட்டிகளைத் திறந்து பொன்னையுந் தூபவ
ர்க்கத்தையும் வெள்ளைப்போளத்தையும் அதற்குக்
௰௨ காணிக்கையாக வைத்தார்கள். — பின்பு ஏரோதினிடத்
துக்குத் திரும்பப்போகவேண்டாமென்று அவர்கள்
சொப்பனத்திலே தேவ உத்தரவுபெற்று, வேறுவழி
யாய்த்தங்கள் தேசத்துக்குப்புறப்பட்டுப்போனார்க
௰௩ ள். — அவர்கள் புறப்பட்டுப்போனபின்பு, பராப
ரனுடைய தூதன் சொப்பனத்திலே யோசேப்புக்குக்

காணப்பட்டுச்சொன்னதாவது, ஏரோது இந்தப்
பிள்ளையைக்கொலைசெய்யத்தேடுவான் ஆகையால், நீ
யெழுந்து பிள்ளையையும் அதினுடைய தாயையுங்
கூட்டிக்கொண்டு, எகிப்பத்து தேசத்துக்கு ஓடிப்
போய், நான் உனக்குச்சொல்லுமளவாகவும் அவ்விட
௰௪ த்திலிருவென்றான்,—உடனே அவன் எழுந்து, இரா
த்திரியிலே பிள்ளையையும் அதினுடைய தாயையுங்
கூட்டிக்கொண்டு, எகிப்பத்துக்குப் புறப்பட்டுப்
௰௫ போய்,—ஏரோது மரணம் அடைந்த காலமளவாக
வும், அவ்விடத்திலிருந்தான். எகிப்பத்திலிருந் தென
னுடைய குமாரனை வரவழைத்தேனென்று தீர்க்கத
ரிசியைக்கொண்டு பராபரன் திருவுளம்பற்றினது நி
றைவேறும்படிக்கு அப்படி நடந்தது.
௰௬ அப்பொழுது ஏரோது தான் சாஸ்திரிகளால் வஞ்சிக்
கப்பட்டதைக்கண்டு, மிகுந்த கோபம் அடைந்து,
அந்தச் சாஸ்திரிகளிடத்திலே தான் கேட்டாராய்ந்த
காலத்தின்படி, பெத்லேகேமிலும் அதினுடைய
சகல எல்லைகளிலும் இரண்டு வயது முதற்கொண்டு
அதற்குக்குறைந்திருந்த வயதுள்ள சகல ஆண்பிள்ளை
௰௭ களையுங்கொலைசெய்ய ஆட்களையனுப்பினான்.—அப்
பொழுது எரேமியா தீர்க்கதரிசியால் சொல்லப்பட்
டது நிறைவேறிற்று. அவன் சொன்னதென்னவென
௰௮ றால்,—இராமா ஊரிலே புலம்பலும் அழுகையும் மி
குந்த துக்கிப்புமுள்ள கூக்குரல் கேட்கப்பட்டது.
இராகேலு தன்பிள்ளைகளைக்குறித்து அழுதுகொண்
டு, அந்தப்பிள்ளைகளில்லாதபடியால் ஆறுதலடை
யாதிருக்கிறாளென்பதே.
௰௯ ஏரோது இறந்தபின்பு, சொப்பனத்திலே பராபர
னுடைய தூதன் எகிப்பத்திலே யோசேப்புக்குக்கா
௨௰ ணப்பட்டு,—பிள்ளையினுடைய பிராணனை வாங்கத்
தேடினவர்கள் இறந்துபோனார்கள் ஆகையால், நீ எ
ழுந்து பிள்ளையையும் அதினுடைய தாயையுங் கூட்
டிக்கொண்டு, இஸ்ரயேல் தேசத்துக்குப்போவென
௨௰௧ றான்.—அந்தப்படியே அவன் எழுந்திருந்து, பிள்ளை
யையும் அதினுடைய தாயையுங் கூட்டிக்கொண்டு,

இஸ்ரவேல் தேசத்துக்குப் புறப்பட்டபொழுது—
௨௨ அருகேலாவு என்பவன் தன்தகப்பனாகிய ஏரோதினு
டைய பட்டத்துக்குவந்து, யூதேயாவையாளுகிறானெ
ன்று கேள்விப்பட்டு, அங்கே போகப்பயந்தான்.
அப்பொழுது சொப்பனத்திலேயவன் தேவஉத்தரவு
பெற்று, கலிலேயாநாட்டினுடைய திசைகளிலே விலக
௨௩ கிப்புறப்பட்டுப்போய்,—நசரேயனென்றழைக்கப்
படுவாரென்கிறதாய்த் தீர்க்கதரிசிகளாற்சொல்லப்ப
ட்டது நிறைவேறும்படிக்கு, நசரேத்தூரிலே வந்து
வாசம்பண்ணினான்.

## ௩. அதிகாரம்.

௧ அக்காலத்திலே யோவானஸ்நானன் வந்து,—
௨ பரலோக இராச்சியத்தின் ஆளுகை சமீபமா
யிருக்கிறதாகையால் குணப்படுங்களென்று யூதே
யாவின் வனாந்தரத்திலே பிரசங்கம்பண்ணினான்.—
௩ அவன் யாரென்றால், பராபரனுடைய மார்க்கத்தை
நன்றாக்கச்செய்யுங்களென்றும் அவருடைய பாதை
களைச் செவ்வை பண்ணுங்களென்றும் வனாந்தரத்தி
லே கூப்பிடுகிறவனுடைய சத்தமுண்டென்று ஏசா
யா வென்னுந் தீர்க்கதரிசியினாற் சொல்லப்பட்டவ
௪ னே.—அல்லாமலும் அந்தயோவான் ஒட்டகமயிர்
உடையைத்தரித்து, தன்னுடைய அரையில் வார்
ச்சையைக் கட்டிக்கொண்டிருந்தான். வெட்டுக்கி
ளிகளுங் காட்டுத்தேனும் அவனுக்கு ஆகாரமாயிருந்
௫ தன்.—அப்பொழுது எருசலேம்பட்டணத்தாரும்
யூதேயாத்தேசத்தாரனைவரும் யோர்தான் நதிக்கடுத்த
சுற்றுப்புறத்தார்யாவரும் அவனிடத்துக்குப்புறப்ப
௬ ட்டுவந்து,—தங்கள்பாவங்களை யறிக்கையிட்டு, யோ
ர்தான் நதியில் அவனாலே ஞானஸ்நானம்பெற்றார்கள்.
௭ அப்படியிருக்கையில், பரிசேயர் சதுசேயர் என்ப
வர்களிலும் அநேகர் தன்னாலே ஞானஸ்நானம்பெற
ம்படிக்குவருகிறதை யவன் கண்டு, அவர்களுக்குச்
சொன்னதாவது, விரியன்பாம்புகளின் குட்டிகளாக

ளொப்பானவர்களே இனிவரும் கோபத்துக்கு நீங்க
ள் தப்பித்துக்கொள்ளும்படியாய், உங்களுக்குவகை
௮ காட்டினவனெவன்.—அப்படியானால் குணப்படுத
௯ லுக்குத்தக்க கனிகளைக்கொடுங்கள்.—ஆபிரகாம் எங்
களுடைய பிதாவென்றுசொல்லி, உங்களுள்ளத்திலே
நினைத்துக்கொள்ளாதிருங்கள். ஆபிரகாமுக்குப்பா
பான இந்தக்கற்களினால் பிள்ளைகளையுண்டுபண்ணவல்ல
வராயிருக்கிறாரென்றுங்களுக்குச்சொல்லுகிறேன்.—
௰ இப்பொழுதே கோடரி மரங்களுடைய வேருக்கே
வைத்திருக்கின்றது. ஆகையால் நல்லகனிகளைக்கொ
டாதமரங்களெல்லாம்வெட்டி அக்கினியிலே போ
௰௧ டப்படும்.—நீங்கள் குணப்படும்படிக்கு, நான் சல
த்தினாலேயுங்களுக்கு ஞானஸ்நானங்கொடுக்கிறேன்.
எனக்குப்பின்வருகிறவரோ என்னைப்பார்க்கிலும் அ
திக வல்லமையுடையவர். அவருடைய பாதரட்சை
களைச்சுமக்க, நான் பாத்திரவானல்ல. அவரோபரிசுத்த
ஆவியினாலும் அக்கினியினாலும் உங்களுக்கு ஞான
௰௨ ஸ்நானங்கொடுப்பார்.—அவருடைய கையில் தூற்
றுக்கூடையிருக்கின்றது. அவர் தமது களத்தை முழு
துவதும்விளக்கி, தம்முடைய கோதுமையைக்
களஞ்சியத்திலேசேர்ப்பார். பதரையோ அவியாதஅக்
கினியிலே சுட்டுப்போடுவாரென்றான்.
௰௩ அப்பொழுது இயேசுவானவர் யோவானாலேஞான
ஸ்நானம்பெறுவதற்கு, கலிலேயா நாட்டை விட்டு,
யோர்தானருகேயிருக்கிற அவனிடத்துக்கு வந்தார்.
௰௪ யோவானோவென்னில் அவரைத்தடைபண்ணி, உம
மாலே நான் ஞானஸ்நானம்பெறவேண்டுவதாயிருக்க
௰௫ க, நீர் என்னிடத்துக்கு வரலாமாவென்றான்.—அத
ற்கு இயேசுவானவர் அவனுடனே சொன்னதாவது,
இவ்விதமாய்ச்சகல நீதியையும் நிறைவேற்றுகிறது
நமக்கேற்றதாயிருக்கின்றது. ஆகையால் இப்பொழு
துச்சம்மதிப்பாயாகவென்றார். அப்பொழுது அவன்
௰௬ சம்மதித்தான்.—இயேசுவானவர் ஞானஸ்நானம்பெ
ற்றுச்சலத்தைவிட்டேறிவந்தவுடனே, வானம் அவ
ருக்குத்திறக்கப்பட்டது. அல்லாமலும் பராபரனு

டைய ஆவிபுறாவைப்போலிறங்கி, அவர்மேலவருகி
௰௭ றதைக்கண்டான்.—மேலும், இவர் எனக்கு அன்
பாயிருக்கிற என்னுடைய குமாரன், இவரிடப்பிரியமா
யிருக்கிறேனென்று, வானத்திலிருந்து ஒருசத்தமுண்
டாயிற்று.

# ௪. அதிகாரம்.

௧ அப்பொழுது இயேசுவானவர் பசாசானவனாலே
குற்றஞ்செய்யத்தூண்டப்படுவதற்கு ஆவியி
னாலே வனாந்தரத்திற்கொண்டுபோகப்பட்டார்.—
௨ (அங்கே) அவர்நாற்பதுநாள் இரவும்பகலும் உபவாச
ம்பண்ணினபின்பு, அவருக்குப்பசியுண்டாயிற்று.—
௩ அப்பொழுது அந்தத்தீயோன் அவரிடத்துக்குவந்து,
நீபராபரனுடைய குமாரனானால், இந்தக்கற்களை அப்
௪ பங்களாகும்படி கட்டளையிடு என்றான்.—அதற்கவர்
மாறுத்தாரஞ்சொன்னதாவது, மனிதனானவன் அப்
பத்தினாலேமாத்திரமல்லப்பராபரனுடையதிருவாய
மலர்ந்தருளிச்செய்கிற எந்தவாக்கினாலும்பிழைப்பா
௫ னென்றெழுதியிருக்கின்றதென்றார். — அப்பொழு
து பசாசானவன் அவரைப்பரிசுத்தபட்டணத்துக்குக்
கொண்டுபோய், அவரைத்தேவாலயத்து உப்பரி
௬ கையின்மேனிறுத்தி,—உன்னைக்குறித்துத்தம்முடையது
தர்களுக்குக்கட்டளையிடுவாரென்றும், உன்னுடை
யபாதங்கல்லிலிடறாதபடிக்கு அவர்கள் உன்னைக்கை
களினேந்திக்கொண்டு போவார்களென்று மெழுதியி
ருக்கின்றதாகையால், நீபராபரனுடைய குமாரனா
௭ னால் தாழக்குதியென்றான்.--அதற்கு இயேசுவானவர்
சொன்னது, அதுவுமல்லாமல், உன் தேவனாகிய
பராபரனைப்பரிட்சைபாராதிருப்பாயாகவென்று
௮ மெழுதியிருக்கின்றதென்றார்.—மறுபடியும் பசா
சானவன் அவரைமிகவும் உயர்ந்தமலையின்மேற்கொ
ண்டுபோய், உலகத்திலுள்ள சகல இராச்சியங்களை
யும் அவைகளின்மகிமையையும் அவருக்குக்காண

௯ பித்து.—நீ சாஷ்டாங்கமாய் விழுந்து, என்னைத் தொழு
துகொண்டால், இவைகளெல்லாவற்றையும் உனக்
௰ குத் தருவேனென்று சொன்னான்.—அப்பொழுது
இயேசுவானவர் அவனுக்குச் சொன்னதாவது, உன்
தேவனாகிய பராபரனைத் தொழுதுகொண்டு அவரொ
ருவருக்கே யாராதனை செய்வாயாக வென்றெழுதியிரு
க்கின்றதாகையால், சாத்தானே, அப்புறம் போவெ
௰௧ ன்றார்.—அப்பொழுது பசாசானவன் அவரைவிட்டு
ப்போய்விட்டான். உடனே தேவதூதர்கள் சேர்ந்து
வந்து, அவருக்கூழியஞ்செய்தார்கள்.
௰௨ பின்பு யோவான் காவலில் வைக்கப்பட்டானென்று
இயேசுவானவர் கேள்விப்பட்டுக் கலிலேயா நாட்டுக்கு
௰௩ ப்புறப்பட்டுப்போய், நாசரேத்தூரைவிட்டுச், செபு
லோன் நவ்தலியென்னும் நாடுகளின் எல்லைகளிற் கடற்
கரையருகேயிருக்கின்ற கப்பர்நாகூம் பட்டணத்தில்
௰௪ வந்து, வாசம்பண்ணினார்.—அதினாலே, கடற்கரை
யருகிலும் யோர்தான் நதியோரத்திலுமிருக்கிற அஞ்
ஞானிகள் அடங்கியிருக்கிற கலிலேயா தேசமாகிய
செபுலோன் தேசத்தாரும் நவ்தலி தேசத்தாருமாகிய
இருளிலிருக்கின்ற சனங்கள் மிகுந்த ஒளியைக் கண்டா
௰௫ ர்கள்.—மரண நிழலுள்ள திசையிலிருக்கிறவர்களுக்கு
௰௬ ஒளி தோன்றிற்றென்று,—ஏசாயா தீர்க்கதரிசியாலே
சொல்லப்பட்டது நிறைவேறிற்று.
௰௭ அதுமுதல் இயேசுவானவர், பரலோக இராச்சியத்
தின் ஆளுகை சமீபித்ததாகையால், குணப்படுங்க
ளென்று பிரசங்கிக்கத்தொடங்கினார்.
௰௮ ஒருகாலத்திலே இயேசுவானவர் கலிலேயா நாட்டின் க
டலருகே நடக்கையில், மீன்பிடிக்கிறவர்களாகிய பே
துரு என்னப்பட்ட சீமோனும், அவனுடைய சகோ
தரன் அந்திரேயாவுமாகிய இருவருங் கடலிலே வலை
போட்டுக்கொண்டிருக்கிறபொழுது அவர்களைக் கண்
௰௯ டார்.—அவர்களோடே அவர் சொன்னதாவது, என்
பின்னே வாருங்கள், உங்களை மனிதரைப் பிடிக்கிறவர்க

௨௰ ளாக்குவேனென்றார்.—உடனே அவர்கள் வலைகளைவி
ட்டு அவரைப்பின்பற்றினார்கள்.
௨௧ அவர் அவ்விடம்விட்டு, அப்புறம்போகையில், செப்பே
தேயுவினுடையமகன் யாக்கோபும் இவனுடைய
சகோதரன் யோவானுமாகிய இருவருந்தங்கள்தகப்
பன் செப்பேதேயுவுடனேபடவிலிருந்து, தங்கள்வலை
களைத்தைத்துக்கொண்டிருக்கிறபொழுது, அவர்க
௨௨ ளைக்கண்டு, அவர்களையும் அழைத்தார்.—உடனே
அவர்கள்தங்கள்படவையுந்தகப்பனையும்விட்டு, அவ
ரைப்பின்பற்றினார்கள்.
௨௩ பின்பு இயேசுவானவர் கலிலேயாநாடெங்குஞ் சுற்றி
நடந்து, ஜெப ஆலயங்களிற்சனங்களுக்கு உபதேச
ஞ்செய்து, பரலோகராச்சியத்தைக்குறித்த சுவி
சேஷத்தைப்பிரசங்கித்து, சனங்களுக்குண்டாயிரு
ந்தசகலவிதமானவியாதிகளையுஞ்சகலவிதமானநோய
௨௪ களையும் (நீக்கி அவர்களை) சுகமாக்கினார்.—அவரு
டையகீர்த்தி சீரியாதேசத்திலெங்கும் பிரபலமாயி
ற்று. பின்பு பலபலவியாதிகளையும் உபாதிகளையும்
அடைந்தசகலபிணியாளிகளையும் பசாசுபிடித்தவர்க
ளையுஞ்சந்திரரோகிகளையுந்திமிர்வாதக்காரரையும் அவ
ரிடத்துக்குக்கொண்டுவந்தார்கள். அவர்களைச்சுக
௨௫ மாக்கினார்.—கலிலேயாவிலும் தெக்கப்போலியிலும்
எருசலேமிலும் யூதேயாவிலும் யோர்தான் நதிக்
கேறாங்களிலுமிருந்து மிகுந்தசனங்கள் வந்து அவர்
பின்சென்றார்கள்.

# ௫. அதிகாரம்.

௧ அவர் அந்தச்சனங்களைக்கண்டு, மலையின்மே
லேறியிருக்கிறபொழுது, அவருடைய
௨ சீஷர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.—அப்பொழுது
அவர்தமது திருவாயைத்திறந்து, அவர்களுக்கு உப
தேசித்துச்சொன்னதாவது,
௩ ஆவிக்குரிய எளிமையுள்ளவர்கள்பரலோகராச்சி
யத்தையடைவார்கள் ஆனபடியால், அவர்கள் பாக்கிய
வான்கள்.

௪ துயரபபடுகிறவர்கள ஆறுதலடைவார்கள ஆகையா
ல, அவர்கள பாககியவானகள,
௫ சாநதகுணமுளளவர்கள பூமியைசசுதநதரிததுககொ
ளவார்கள ஆகையால, அவர்கள பாககியவானகள.
௬ நீதியினமேற பசிததாகததைபபோல (விருபப)முள
ளவர்கள திருததியடைவார்கள ஆகையால, அவர்கள
பாககியவானகள.
௭ இரககமுளளவர்கள இரககததையடைவார்கள ஆகை
யால, அவர்கள பாககியவானகள.
௮ சுததமான இருதயமுளளவர்கள பராபரனைததரிசி
பபார்கள ஆகையால, அவர்கள பாககியவானகள.
௯ சமாதானததைநடபபிககிறவர்கள பராபரனுடைய
புததிரராயிருபபார்கள ஆகையால, அவர்கள பாககி
யவானகள.
௰ நீதியினிமிததந துனபபடுகிறவர்கள பரலோகஇரா
சசியததையடைவார்கள ஆகையால, அவர்கள பாக
௰௧ கியவானகள.—எனனிமிததம உஙகளை நிநதிதது
துனபபபடுததிப பலவித தீமையான மொழிகளை
யுஙகளமேற பொயயாயசசொனனார்களானால, நீங
௰௨ கள பாககியவானகளாயிருபபீர்கள.—பரலோகததி
லேயுஙகளுககு மிகுநதபலனகிடைபபதினாலே, நீங
கள சநதோஷபபடடு மிகவுஙகளிகூருஙகள உஙகளு
ககு முனனிருநத தீர்ககதரிசிகளையும அபபடியே
துனபபபடுததினார்கள.
௰௩ நீஙகள பூமிககு உபபைபபோலிருககிறீர்கள. உப
பானது சாரமறறுதேயானால, எதினாலேசாரமாககப
படும. அது வெளியேகொடடபபடுவதறகுமமனித
ராலே மிதிககபபடுவதறகுமேயனறி, வேறொனறுக
குமாகாது.
௰௪ நீஙகள உலகததுககு ஒளியாயிருககிறீர்கள, மலையி
னமேலிருககிற படடணம மறைநதிருககமாடடா
௰௫ து.—மேலும விளககைககொளுததி மரககாலால
மூடிவைககமாடடார்கள, விளககை யொருதணடி
னமேலேவைபபார்கள. அபபொழுது அதுவீடடி

௰௬ விருக்கிறயாவருக்கும் பிரகாசங்கொடுக்கும்.—அப
படியே மனிதரானவர்கள் உங்கள் நற்கிரியைகளைக்
கண்டு, பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவின்
மகிமைவிளங்கப்பண்ணத்தக்கதாக, உங்கள் ஒளி அவ
ர்கள் முன்பாகப்பிரகாசிக்கக்கடவது.
௰௭ வேதப்பிரமாணத்தையாகிலுந் தீர்க்கதரிசனங்களை
யாகிலுந் தள்ளிவிடுகிறதற்கு நான்வந்ததாக நினையா
திருங்கள். அவைகளைத்தள்ளி விடுகிறதற்கல்ல, நிறை
௰௮ வேற்றுகிறதற்குவந்தேன்.—வானமும்பூமியுமொழிந்
தும்போனாலும், வேதமுழுவதும் நிறைவேறுவத
ன்றி, அதிலொரு சின்னவெழுத்தாகிலும் ஒரெழுத்
தினுடைய உறுப்பாகிலும் ஒழிந்துபோவதில்லையெ
ன்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
௰௯ ஆகையால் இந்தக்கற்பனைகளில் மிகவுஞ்சிறிய கற்ப
னையையாகிலுந்தள்ளி, அவ்வண்ணமாய் மனிதருக்கு
உபதேசிக்கிறவனெவனோ அவன் பரலோக இராச்சி
யத்தில் மிகவுஞ் சிறியவனென்றெண்ணப்படுவான்.
அவைகளின்படிசெய்து, உபதேசிக்கிறவனோ, பர
லோக இராச்சியத்திலே பெரியவனென்றெண்ணப
௨௰ படுவான்.—ஆதலால் வேதசாஸ்திரிகளும் பரிசேயர்
களுமானவர்களுடைய நீதியைப்பார்க்கிலும் உங்க
ணீதி அதிகப்படாவிட்டால், பரலோக இராச்சிய
த்துக்குட்பிரவேசிக்கமாட்டீர்களென்று உங்களுக்கு
ச்சொல்லுகிறேன்.
௨௧ கொலைசெய்யாதிருப்பாயாகவென்பதுங்கொலைசெ
ய்தவன் நியாயத்தீர்ப்புக்கேதுவாயிருப்பானென்ப
தும் பூர்வத்தாருக்குரைக்கப்பட்டதென்றுகேள்விப
௨௨ பட்டிருக்கிறீர்கள்.— அல்லாமலும் நான் உங்களுக்
குச்சொல்லுகிறதாவது, பிறனை வீணாய்க்கோபித்துக்
கொள்பவனெவனோ அவன்நியாயத்தீர்ப்புக்கேதுவா
யிருப்பான். மேலும் பிறனை வீணனென்கிறவனெவ
னோ அவன் பெரியசங்கத்தீர்ப்புக்கேதுவாயிருப்பா
ன். அவனை மதிகேடனென்கிறவனெவனோ அவன
௨௩ எரிநரகத்துக்கேதுவாயிருப்பான்.—ஆகையால் நீ பலி
பீடத்தினிடத்தில் உன் காணிக்கையைச்செலுத்த வந

து, உன்மேற்பிறனுக்குக்குறையுண்டென்று அங்கே
உச நினைவுகொள்வாயாகில்,—அந்தப்பலிபீடத்தின் முன்
உன்காணிக்கையை வைத்துவிட்டுப்போய், முந்தப்
பிறனுடனே யொப்புரவாகிப், பின்புவந்து, உன்கா
உரு ணிக்கையைச்செலுத்துவாயாக.— உனக்கெதிராளி
யானவன் உன்னை நியாயாதிபதிக்கொப்புவியாமலு
ம், அந்தநியாயாதிபதி உன்னை ஊழியக்காரனுக்கொ
ப்புவியாமலும், நீசிறைச்சாலையிலேவைக்கப்படாமலு
மிருக்கும்படிக்குச், சீக்கிரமாய் உன்னெதிராளியுட
னேவழியிலிருக்கும்பொழுதே, அவனுடனே நல்ம
உ௬ னம்பொருந்துவாயாக.—(பொருந்தாவிட்டால்) நீ
கடைசி காசுவரைக்கும் முழுமையுஞ்செலுத்துகிற
தற்குமுன்னே, அவ்விடத்தைவிட்டுத்திரும்பி வரமா
ட்டாயென்றுமெய்யாய் உனக்குச்சொல்லுகிறேன்.
உஎ விபசாரம்பண்ணாதிருப்பாயாகவென்பது பூர்வத்தா
ருக்குரைக்கப்பட்டதென்றுகேள்விப்பட்டிருக்கிறீ
உஅ ர்கள்.—அல்லாமலும் நானுங்களுக்குச்சொல்லுகிற
தாவது ஒருஸ்திரீயை இச்சிப்போடே பார்க்கிறவ
னெவனோ அவன் தன்னிருதயத்தில் அவளோடேவிப
உகூ சாரஞ்செய்தாயிற்று.—ஆகையால் உன் வலது கண்
உன்னைக்கெடுக்கிறதற்கு ஏதுவானால், அதைப்பிடுங்
கியெறிந்துபோடு. உன்சரீரம் முழுமையும் நரகத்
திலேதள்ளப்படாதபடிக்கு, உன் அவயவங்களிலொ
ன்று கெட்டுப்போகிறதே உனக்குநன்மையாயிருக்
௩௰ குமே.—அன்றியும் உன்வலதுகை உன்னைக்கெடுக்க
கிறதற்கேதுவானால், அதைத்தறித்தெறிந்துபோடு.
உன்சரீரமுழுமையும் நரகத்திலேதள்ளப்படாதப
டிக்கு, உன் அவயவங்களிலொன்றுகெட்டுப்போகி
றதே உனக்குநன்மையாயிருக்குமே.
௩௧ அல்லாமலும் யாவனாகிலுந்தன்மனைவியைத்தள்ளி
விட்டால், தள்ளுதலின்சீட்டையவளுக்குக்கொடுக்
௩௨ கக்கடவனென்று சொல்லப்பட்டது.—அப்படியிரு
ந்தும், எவனாகிலுந்தன்மனைவி வேசித்தனமில்லாம
லிருக்கையில், அவளைத்தள்ளிவிட்டால், அவன் அவ
ளைவிபசாரஞ்செய்யப்பண்ணுகிறானென்றும் எவனா

ளுதளளிவிடபபடடவளை விவாகமபணணினால
விபசாரஞ்செயகிறானெனறும நானுஙகளுககுசசொ
லலுகிறேன.

௩௩ அனறியும,பொயயாணையிடாதிருபபாயாகவெனப
தும, உன ஆணைகளைபபராபரனுககுசசெலுததுவா
யாகவெனபதும, பூர்வததாருககுரைககபபடடதெ
௩௪ னறு கேள்விபபடடிருககிறீர்கள. — அலலாமலும
நான உஙகளுககுசசொலலுகிறதாவது, எவவிததிலும
சததியமபணணககூடாது, வானந்தேவாசனமாயி
ருககிறபடியால, வானததினமேல சததியமபணண
லாகாது. பூமிபராபரனுடைய பாதபபடியாயிருக
கிறபடியால, பூமியினமேல சததியமபணணலாகா
௩௫ து.—எருசலேமபெரிய இராசனுடையபடடணமா
யிருககிறபடியால, எருசலேமினமேல சததியமபண
௩௬ ணலாகாது.—உஙகள சிரசின ஒரோமயிரையும நீஙகள
வெணமையுஙகறுபபுமாககததிராணியிலலாதபடி
யால, உஙகள சிரசினமேல சததியமபணணலாகாது.
௩௭ உளளதையுளளதெனறும இலலததையிலலதெனறுஞ
சொலலககடவீர்கள. இவைகளுககு மேறபடடது
தீமையினாலுணடாயிருககினறது.

௩௮ கணணுககுககணணையுமபலலுககுபபதி
லாகபபலலையும வாஙகவேணடுமெனறு சொலலப
௩௯ படடதெனறுகேள்விபபடடிருககிறீர்கள.—நானோ
வெனில உஙகளுககுசசொலலுகிறதாவது,பொலலா
தவனோடே யெதிர்ததுநிறகவேணடாம. ஒருவன
உனனுடைய வலதுகனனததில அடிததால, மறுகன
௪௰ னததையும அவனுககுததிருபபிககாடடு.—உனனுட
னேவழககாடி, உனனுடைய மேலஙகியையெடுத
துககொளளவேணடுமெனறிருககிறவனுககு உனவ
௪௧ ஸதிரததையும விடடுவிடு.—ஒருவன உனனையொரு
காதவழிவருமபடியாகப, பலவநதமபணணினால,
௪௨ அவனோடேயிருகாதவழிமடடுமநடநதுபோ.—உன
னைவேணடிககொளளுகிறவனுககுககொடு. உனனி
டததிறகடனவாஙகவிருமபுகிறவனுககுமுகஙகோணா
திருபபாயாக.

௪௩ பிறனில் அன்புவைத்து, உன் சத்துருவைப் பகைக்கக்
கடவாயென்று சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்
௪௪ டிருக்கிறீர்கள்.—நானோவென்னில் உங்களுக்குச் சொ
ல்லுகிறது, பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதா
பொல்லாதவர்கள் மேலும் நல்லவர்கள் மேலுந் தம்மு
டைய சூரியனையுதிக்கவும் நீதியுள்ளவர்கள் மேலும் அநீதி
யுள்ளவர்கள் மேலும் மழையைப் பெய்யவும் பண்
௪௫ ணுகிறாரகையால்,—நீங்கள் அவருக்குப் புத்திராயி
ருக்கும்படிக்கு, உங்கள் சத்துருக்களில் அன்புவை
த்து, உங்களைச் சபிக்கிறவர்களையாசீர்வதித்து, உங்க
ளைப் பகைக்கிறவர்களுக்கு நன்மையைச் செய்து, உங்களை
நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்து
௪௬ கிறவர்களுக்காகவுஞ் ஜெபம்பண்ணுங்கள்.— அல்லா
மலும், உங்களில் அன்புகூருகிறவர்கள் மேல் மாத்
திரம் அன்பாயிருப்பீர்களானால், உங்களுக்கு என்ன
பலன்வரும். ஆயக்காரரும் அப்படிச்செய்கிறார்
௪௭ களல்லவோ.—உங்கள் சகோதரரை மாத்திரம் வாழ்த்
திக்கொள்வீர்களானால், என்ன விசேஷஞ்செய்கிறீர்
கள். அஞ்ஞானிகளும் அப்படிச்செய்கிறார்களல்ல
௪௮ வோ.—ஆகையால் பரமண்டலங்களிலிருக்கிற உங்க
ள் பிதா பூரணசற்குணராயிருக்கிறதுபோல், நீங்களும்
பூரணசற்குணராயிருக்கக்கடவீர்கள்.

# ௬. அதிகாரம்.

௧ நீங்கள் மனிதர்களாலே காணப்படும் பொருட்
டாய் உங்கள் தருமத்தை அவர்களுக்கு முன்பா
கச்செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள். செ
ய்தால், பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவினி
டத்திலே நீங்கள் பலன் பெறாதிருப்பீர்கள்.
௨ ஆகையால் நீங்கள் தருமஞ்செய்கிறபொழுது, மனி
தர்களாற் புகழப்படும்பொருட்டுச் செப ஆலயங்களிலும்
வீதிகளிலுஞ் செய்கிற வஞ்சகரைப்போல நீ உனக்கு
முன்பாகத் தாரை யூதப்பண்ணக்கூடாது, அவர்கள

தங்கள் பலனையடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே
௩ உங்களுக்குச் சொல்லுகிறேன்.—நீ தருமஞ்செய்கிற
பொழுது, உன் தருமம் அந்தரங்கமாயிருக்கும்படிக்
கு, உன் வலதுகை செய்கிறதை உன் இடதுகையறி
௪ யாதிருக்கக்கடவது.—அப்பொழுது அந்தரங்கமாயி
ருக்கிறதையறிகிற உன்பிதா தாமே வெளியரங்கமாய
௫ உனக்குப் பலனளிப்பார்.—அன்றியும் நீ ஜெபம்
பண்ணுகிறபொழுது வஞ்சகரைப்போலிருக்கக்கூடா
து, அவர்கள் மனிதர்களாற் காணப்படும்படிக்குச்,
ஜெப ஆலயங்களிலேயும் வீதிகளின் முகங்களிலே
யும் நின்றுகொண்டு ஜெபம்பண்ண விரும்புகிறார்கள்.
அவர்கள் தங்கள் பலனையடைந்து தீர்ந்ததென்று மெ
ய்யாகவேயுங்களுக்குச் சொல்லுகிறேன்.
௬ நீ ஜெபம்பண்ணவேண்டுமென்றிருக்கிறபொழுது,
உன் வீட்டின் அறைக்குட் பிரவேசித்து, அந்தக் கத
வைப்பூட்டின் பின்பு, அந்தரங்கத்திலிருக்கிற உன்
பிதாவை நோக்கிச் ஜெபம்பண்ணு. அப்பொழுது
அந்தரங்கமாயிருக்கிறதையறிகிற உன்பிதா வெளிய
௭ ரங்கமாய் உனக்குப் பலனளிப்பார்.—அல்லாமலும்
ஜெபம்பண்ணுகிறபொழுது, நீங்கள் அஞ்ஞானிக
ளைப்போல வீண்வசனிக்கக்கூடாது. அவர்கள் தாங்
கள் அதிகமாய் வசனித்தாற் கேட்கப்படுவோமென்று
௮ நினைக்கிறார்கள்.—அவர்களுக்கொப்பாய் நீங்கள் செ
ய்யாதிருங்கள். நீங்கள் உங்கள் பிதாவை நோக்கி வே
ண்டிக்கொள்ளுமுன்னமே அவர் உங்களுக்கின்னது
௯ வேண்டுமென்று அறிந்திருக்கிறாரே.—ஆகையால்,
நீங்கள் ஜெபம்பண்ண வேண்டுவதெப்படியென்றால்,
பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, உம்மு
டைய திருநாமம் பரிசுத்தமாய்த் தொழுதுகொள்ளப்
௰ படுவதாக.—உம்முடைய இராச்சியத்தின் ஆளுகை
வருவதாக, உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே
செய்யப்படுகிறதுபோலப், பூமியிலேயுஞ் செய்யப்
௧௧ படுவதாக.—இன்றைக்கு எங்களுக்கு வேண்டிய ஆகா
௧௨ ரத்தைத் தாரும்,—எங்கள் கடன்காரருக்கு (கடன்க
ளை) நாங்கள் மன்னிப்பதுபோலத், தேவரீர் எங்கள்

௰௩ கடனகளைமனனிததருளும.—நாஙகள குறறஞசெய
வதறகாலாகாரணததிறபிரவேசியாதபடிசெயது, பொ
லலாஙகினினறு எஙகளை இரடசிததுககொளளும.
இராசசியமும வலலமையும மகிமையும உமககே
யெனறெனறைககுமுணடாயிருககினறது, ஆமென
௰௪ எனறு, செபமபணணககடவீர்கள.—மனிதர்கள
(உஙகளுககு) செயததபபிதஙகளைமனனிபபீர்களா
னால, உஙகளபரமபிதா உஙகளுககுமமனனிபபார்.
௰௫ மனிதர்கள (உஙகளுககு) செயததபபிதஙகளைமன
னியாதிருபபீர்களாகில, உஙகளபிதா உஙகளதபபிதங
களையுமமனனியாதிருபபார்.
௰௬ மேலும நீஙகள உபவாசமபணணுமபொழுது,
வஞசகரைபபோல முகவாடலாயிருககககூடாது.
அவர்கள உபவாசமபணணுகிறது மனிதர்களாறகா
ணபபடுமபொருட்டாயததஙகள முகஙகளைவதஙக
பபணணுகிறார்கள. அவர்கள தஙகளபலனையடைந
திருககிறார்களெனறு மெயயாகவே உஙகளுககுசசொல
௰௭ லுகிறேன.—நீயோ உபவாசிககுமபொழுது, நீ உப
வாசமபணணுகிறது மனிதர்களுககுககாணபபடா
மல, அநதரஙகததிலிருககிற உனபிதாவுககே காணப
படுமபடிககு, உனசிரசைததயிலததாறபூசி, உன
௰௮ முகததைககழுவககடவாய.—அபபொழுது அநத
ரஙகமாயிருககிறதையறிகிற உனபிதாவெளியரஙகமா
யுனககுபபலனளிபபார்.
௰௯ உஙகளபொககிஷமெஙகேயோ அஙகேயுஙகளிரு
தயமுமிருககும ஆகையால, பூமியிலே நீஙகள உங
களுககாகபபொககிஷஙகளைககூடடிவையாதிருஙக
ள. அவவிடததிலே பூசசிபுழுவும அவைகளைக
கெடுககும. திருடருஙகனனமிடடுததிருடுவார்
௨௰ கள.—பரலோகததிலே உஙகளுககாகபபொககிஷ
ஙகளைககூடடிவையுஙகள. அவவிடததிலே பூசசியா
வது புழுவாவது அவைகளைககெடுககிறதுமிலலை.
அஙகே திருடர் கனனமிடடுததிருடுகிறதுமிலலை.—
௨௧ கணணானது சரீரததின விளககாயிருககினறது.—

௨௨ ஆகையாலுன்கண் சொஸ்தமாயிருந்தால், உன்சரீ
௨௩ ரமுழுவதும்வெளிச்சமடைந்திருக்கும்.— உன்
கண் விகாரமாயிருந்தால், உன் சரீரமுழுவதும்
இருளடைந்திருக்கும். அப்படியிருக்க, உன்னி
லுள்ளவெளிச்சம் இருளாயிருந்தால், இருளெவ்வள
௨௪ வும் மிகுதியாயிருக்குமல்லவோ.— ஒருவன் இரண்
டெசமானர்களுக்கு அடிமைசெய்யமாட்டான். என்
னத்தினாலெனில், ஒருவனையவன்பகைத்து, மற்றவ
னைச்சிநேகிப்பான், அல்லது ஒருவனைப்பற்றிக்கொ
ண்டு, மற்றவனையசட்டைபண்ணுவான். நீங்கள்பரா
பரனுக்கும் உலகப்பொருளுக்கும் அடிமைசெய்ய
௨௫ மாட்டீர்கள்.— ஆகையால் உங்கள்சீவனுக்காக என்
னத்தைப்போசனஞ்செய்வோம் என்னத்தைப்பா
னம்பண்ணுவோமென்றும், உங்கள் சரீரத்துக்காக
என்னத்தையுடுப்போமென்றும், கவலைப்படாதிரு
ங்களென்று நான் உங்களுக்குக்கட்டளையிடுகிறேன்
ஆகாரத்தைப்பார்க்கிற் சீவனும் உடையைப்பார்க்
௨௬ கிற் சரீரமும் அதிகமாயிருக்கிறதல்லவோ.— ஆகாச
த்துப்பறவைகளை நோக்கிப்பாருங்கள். அவைகள்
விதைக்கிறதும் அறுக்கிறதுங்களஞ்சியங்களிற்கூட்டி
வைக்கிறதுமில்லை. இல்லாவிட்டாலும், உங்கள்பரம
பிதா அவைகளுக்கு உணவைக்கொடுக்கிறார். அவை
களைப்பார்க்கிலும் நீங்கள்மேன்மையுள்ளவர்களல்ல
௨௭ வோ.— அல்லாமலும் உங்களிலொருவன் கவலைப்ப
டுகிறதினாலேதன்சரீர அளவுக்கு ஒருமுழத்தையுங்
௨௮ கூட்டுவானோ (மாட்டானே)— பின்னும் உடைகளு
க்காக நீங்கள்கவலைப்படுகிறதென்ன. வெளியிலே
லீலியென்னும்புஷ்பங்கள்வளருகிறவகையையுற்று
ப்பாருங்கள். அவைகள் உழைக்கிறதுமில்லை. நூற்
௨௯ கிறதுமில்லை.— இல்லாவிட்டாலும் இராசனாகிய சா
லோமோனானவன் மிகுந்தமகிமையுடையவனாயிரு
ந்தும், அந்தப்புஷ்பங்களிலொன்றைப்போல (அழ
காய்) உடுத்தியிருந்ததில்லையென்று, உங்களுக்குச்
௩௰ சொல்லுகிறேன்.— அப்படியிருக்க, ஒருநாள் வள
ருகிறதுமாய் மறுநாள் அடுப்பிற்போடப்படுகிற

மாயிருக்கிறபுல்லுக்குப் பராபரன் இவ்விதமாய் உடுத்
திவித்தால், மிகவும் அதிகமாய் உங்களுக்கு உடுத்தி
௩௧ விப்பாரல்லவோ. அற்ப விசுவாசிகளே.—ஆகை
யால் என்னத்தைப் போசனஞ்செய்வோமென்றும்,
என்னத்தைப் பானம்பண்ணுவோமென்றும், என்
னத்தையுடுப்போமென்றும், அஞ்ஞானிகள் கவலை
யாய்த் தேடுகிறதுபோல நீங்கள் கவலைப்படாதிருப்
௩௨ பீர்களாக.—உங்கள் பரமபிதா இவைகளெல்லாம்
உங்களுக்கு வேண்டியவைகளென்று, அறிந்திருக்கி
௩௩ றார்.—ஆதலால் முதலாவது நீங்கள் பராபரனுடைய
இராச்சியத்தையும் அவருடைய நீதியையுந் தேடுங்கள்
அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூட
௩௪ க்கொடுக்கப்படும்.—அப்படியிருக்க, நாளைக்காக
(இன்றைக்கு) கவலைப்படாதிருங்கள். நாளைக்காக
நாளைக்குத்தானே யுங்களுக்குக் கவலையுண்டாகும்.
ஒவ்வொரு நாளுக்கு அதினதினுடைய வருத்தமேபோ
துமே.

## ௭. அதிகாரம்.

நீங்கள் (மற்றவர்களை) எப்படி எண்ணுவீர்களோ
௨ அப்படி நீங்களும் எண்ணப்படுவீர்கள்.—அல்
லாமலும் எந்த அளவால் நீங்கள் அளப்பீர்களோ
௩ அதினாலே உங்களுக்கும் அளப்பார்கள்.—ஆகை
யால் நீங்கள் (ஒருவரையுங்) குற்றவாளிகளென்றெ
ண்ணாதிருங்கள், எண்ணினால் உங்களையுங் குற்றவா
ளிகளென்றெண்ணுவார்கள். மேலும் நீ உன்கண்
ணிலிருக்கிற உத்திரத்தைப் பாராமற், பிறனுடைய
௪ கண்ணிலிருக்கிற சிராயைப் பார்க்கிறதென்ன.—உத்
திரமே உன்கண்ணிலிருக்கையில், நீ பிறனை நோக்கி
உன்கண்ணிலிருக்கிற சிராயை நான் எடுத்துப்போடு
கிறேன். இடங்கொடு என்று நீ சொல்வதென்ன.—
௫ வஞ்சகனே, முதலாவது நீ உன்கண்ணிலிருக்கிற
உத்திரத்தையெடுத்துப்போடு, பின்பு பிறனுடைய
கண்ணிலிருக்கிற சிராயையெடுத்துப்போட நன்றா
யப் பார்ப்பாய்.

௬ பரிசுத்தமானதை நீங்கள் நாய்களுக்குக்கொடுக்கக்
கூடாது, அல்லாமலும் உங்கள் முத்துக்களைப் பன்
றிகளுக்குப் போடக்கூடாது. போட்டால் அவை
கள் அந்த முத்துக்களைத் தங்கள் கால்களால் மிதித்துப்
பின்பு திரும்பிக்கொண்டு உங்களைப் பீறும்.
எ வேண்டிக்கொள்ளுகிறவனெவனும் வாங்கிக்கொள்ளுகி
அ றான். தேடுகிறவன் கண்டடைகிறான்.—தட்டுகிறவ
னுக்குத் திறக்கப்படும். ஆகையால், வேண்டிக்கொ
ள்ளுங்கள். அப்பொழுது உங்களுக்குக் கொடுக்க
ப்படும். தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்
கள். தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்குத் திற
௯ க்கப்படும்.—உங்களிலொருமனிதனாகிலும், தன்
னிடத்தில் அப்பங்கேட்டுக்கொள்ளுகிற தன்மகனு
௰ க்குக் கல்லைக்கொடுப்பானோ.—மீனை அவன் கேட்டுக்
கொண்டால், அவனுக்குப் பாம்பைக்கொடுப்பா
௰௧ னோ.—அப்படியிருக்க, பொல்லாதவர்களாகிய நீங்
கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக்கொடுக்க
அறிந்திருந்தால், பரமண்டலங்களிலிருக்கிற உங்கள்
பிதா மிகவும் அதிகமாய்த் தம்மை வேண்டிக்கொள்
ளுகிறவர்களுக்கு நன்மைகளைக்கொடுப்பாரல்லவோ.
௰௨ ஆனபடியும் எவைகளை (மற்ற) மனிதர்கள் உங்களு
க்குச்செய்ய விரும்புகிறீர்களோ, அவைகளையே
நீங்களும் அவர்களுக்குச்செய்யுங்கள். நியாயப்பிர
மாணமுந்தீர்க்கதரிசிகள்சொன்னவைகளும் இந்தக்
(கட்டளையிலே) அடங்கியிருக்கின்றன.
௰௩ கேட்டுக்குக்கொண்டுபோகிறவாசல் விரிவாயும் வழி
விசாலமாயுமிருக்கின்றது. அல்லாமலும் அதின்
வழியாய்ப்பிரவேசிக்கிறவர்கள் அநேகர். ஆதலால்,
இடுக்கமானவாசல்வழியாய்ச் (சீவனில்) பிரவேசியுங்
௰௪ கள்.—சீவனுக்குக்கொண்டுபோகிற வாசல் மிகவும்
இடுக்கமாயும் வழிநெருக்கமாயுமிருக்கின்றது. சிலர்
மாத்திரம் அதைக்கண்டடைகிறார்கள்.
௰௫ மேலும் ஆட்டைப்போல் உருவுதரிக்கிற ஓநாய்
களைப்போல் மனதுடையவர்களாய் உங்களிடத்
துக்குவருகிறகள்ளத்தீர்க்கதரிசிகளுக்கு நீங்கள் இட

௰௬ கொண்டாட லெச்சரிக்கையாயிருங்கள். — அவர்களு
டைய கனிகளினாலே யவர்களை யறிவீர்கள். முட்செடி
களில் திராட்சப்பழங்களையும் முட்பூண்டுகளில்
௰௭ அத்திப்பழங்களையும் பறிக்கிறார்களா. — நல்லமரங்க
ளெல்லாம் நல்லகனிகளைக் கொடுக்கும், கெட்டமர
௰௮ மோ பொல்லாத கனிகளைக் கொடுக்கும். — நல்ல
மரம் பொல்லாத கனிகளையும் கெட்டமரம் நல்லகனி
௰௯ களையுங் கொடுக்கமாட்டாது. — நல்லகனிகளைக் கொ
டாத மரங்களெல்லாம் வெட்டப்பட்டு, அக்கினியி
௨௰ லே போடப்படும். — அப்படியிருக்க, அவர்கள்
கனிகளினாலே நீங்கள் அவர்களை யறிவீர்கள்.
௨௧ என்னைக் கர்த்தாவே, கர்த்தாவே, என்று சொல்லுகிற எ
வனும் பரலோக ராச்சியத்தில் பிரவேசிப்பதில்லை.
பரமண்டலங்களிலேயிருக்கிற என்பிதாவினுடைய சி
த்தத்தின்படி செய்கிறவனே அதில் பிரவேசிப்பான்.
௨௨ அந்நாளிலே யநேகர் என்னை நோக்கி; ஆ! கர்த்தாவே,
கர்த்தாவே உமது நாமத்தினாலே நாங்கள் தீர்க்கதரிசன
முரைத்தோமல்லவோ. உமது நாமத்தினாலே பசா
சுகளைத் துரத்தினோமல்லவோ. உமது நாமத்தினா
லேயநேக அற்புதங்களைச் செய்தோமல்லவோவென்
௨௩ பார்கள். — அப்பொழுது நான் அவர்களை நோக்கி,
நான் ஒருக்காலும் உங்களை யறிந்ததில்லை. அக்கிரமக்
காரரே, நீங்கள் என்னைவிட்டுப் போங்களென்று அவர்
௨௪ களுக்கறிவிப்பேன். — ஆகையால் எவனாகிலும் நான்
சொல்லிய வசனங்களைக் கேட்டு அவைகளின்படி செ
ய்தால், அவனைத் தன் வீட்டைக் கல்மலையின்மேற் கட்
௨௫ டின புத்தியுள்ள மனிதனுக் கொப்பிடுகிறேன். — அந்
தவீடு கல்மலையின்மேல் அஸ்திபாரம் போட்டிருந்த
படியால், பெருமழை சொரிந்தும், பெருவெள்ள
ம் வந்தும், காற்றுகள் அடித்தும் அந்தவீட்டின்மே
௨௬ லேமோதியும், அது விழுந்ததில்லை. — எவனாகிலும்
நான் சொல்லிய வசனங்களைக் கேட்டும், அவைகளின்
படி செய்யாதிருந்தால், அவன் தன் வீட்டை மணலின்
மேற்கட்டின புத்தியீனனுக் கொப்பாயிருப்பான்.

௨௭ பெருமழை பெய்து, பெருவெள்ளம் வந்து காற்
றுக்களும் அடித்து அந்த வீட்டின்மேல் மோதின பொ
ழுது, அது விழுந்து, முழுவதும் இடிந்து போயிற்
றென்றார்.
௨௮. பின்பு நடந்ததென்னவென்றால் இயேசுவானவர் இந்த
வசனங்களைச் சொல்லி முடித்த பொழுது, அவர் வேத
௨௯ பாரகரைப் போலல்ல,—அதிகாரமுடையவரைப்
போலப் போதித்தபடியினாலே, ஜனங்கள் அவரு
டைய உபதேசத்தைக் குறித்து ஆச்சரியப்பட்டார்கள்.

# அ. அதிகாரம்.

அவர் மலையிலிருந்து இறங்கி வந்த பொழுது திரளா
ன ஜனங்கள் அவரைப் பின்தொடர்ந்தார்கள்.
௨ அப்பொழுது ஒரு குஷ்டரோகி வந்து, அவரைச் சாஷ்
டாங்கமாய் வணங்கி, ஆண்டவரே, உமக்குச் சித்தமா
னால் என்னைச் சுத்தமாக்க உம்மாலாகுமென்றான்—
௩ இயேசுவானவர் தமது கையை நீட்டி, அவனைத் தொ
ட்டு, எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகு என்றார்.—
௪ உடனே குஷ்டரோகம் நீங்கி அவன் சுத்தமானான். அல்
லாமலும் இயேசுவானவர் அவனுடனே சொன்னது
நீயிதை யொருவனுக்குஞ் சொல்லாமல், அவர்களுக்
குச் சாட்சியாகும்படிக்கு, நீ போய், ஆசாரியனுக்கு
உன்னைக் காண்பித்து, மோசே கட்டளையிட்ட காணி
க்கையைச் செலுத்து என்றார்.
௫ இயேசுவானவர் கப்பர்நாகூம் பட்டணத்தில் பிரவே
சித்த பின்பு, நூற்றுக்குச் சேர்வைக்காரனொருவன் அவ
௬ ரிடத்தில் வந்து, அவரை நோக்கி.—ஆண்டவரே, என்
வேலைக்காரன் திமிர்வாதமுள்ளவனாய் வீட்டிலே கிட
ந்து, மிகவும் உபாதிப்படுகிறானென்று வேண்டிக்கொ
௭ ண்டான்.—இயேசுவானவர் சொன்னது, நான் வந்து,
௮ அவனைச் சுகமாக்குவேனென்றார்.—அதற்கு அந்த
ச் சேர்வைக்காரன் சொன்னது, ஆண்டவரே, நீர் என்
வீட்டுக்குட் பிரவேசிப்பதற்கு நான் பாத்திரனல்ல.—

௯ அலலாமலும, நான அதிகாரததுககுககீழபபடடவ
னாயிருநதும, எனககுடபடடிருககிற சேவகரிலொ
ருவனைப, போவெனறுபோகிறான. மறறொருவனை
வாவெனறுவருகிறான. எனககு அடிமையானவனுட
னே, இதைசசெயயெனறுசெயகிறான. ஆகையால
நீர் ஒருவார்ததைமாததிரஞசொனனால, என்வேலைக
௰ காரன சொஸதமடைவானெனறான.—இயேசு
அதைககேடடு ஆசசரியபபடடுததமககுப்பினசெல
லுகிறவர்களுடனே சொனனதாவது, இஸரவேலருக
குளளும நானிபபடிபபடட விசுவாசமுளளவனைக
கணடதிலலையெனறுமெயயாகவேயுஙகளுககுசசொ
௰௧ லலுகிறேன.—பினனும நான உஙகளுககு அறிவிக
கிறதாவது, அநேகமபேர் கிழககிலும மேறகிலு
மிருநதுவநது, பரலோக இராசசியததிலே ஆபிரகா
ம, ஈசாககு, யாககோபு எனபவர்களுடனேகூடப
௰௨ பநதியிருபபார்கள.—இராசசியததாரோவிருளாநத
ரமான இருளிலே தளளபபடுவார்கள. அஙகே
அழுகையும பறகடிபபுமுணடாயிருககுமெனறு
சொனனபினபு, அவர் அநதசசேர்வைககாரனைநோக
௰௩ கி, நீ வீடடுககுபபோகலாம.—உனவிசுவாசததினப
டி உனககாககடவதெனறார். அநநாழிகையிலேதா
னே அவனுடையவேலைககாரன சொஸதம அடைந
தான.

௰௪ இயேசுவானவர் பேதுருவினவீடடிலேவநது, அவ
னுடைய மாமி சுரமாயககிடககிறதைககணடு,—
௰௫ அவளகையைததொடடார். உடனேசுரம அவளை
விடடு நீஙகிறறு. அவள எழுநதிருநது, அவர்களுக
௰௬ கூழியஞசெயதாள,—அஸதமனமான பொழுது,
பசாசுபிடிததிருககிற அநேகரை அவரிடததுககுக
கொணடுவநதார்கள. அவர் அநத ஆவிகளை ஒருவார்
ததையினாலே துரததிபபிணியாளிகளெலலாரையுங
௰௭ குணமாககினார்.—அபபடியே, அவர் நமது பல
இனஙகளையேறறுககொணடு, நமமுடையநோயகளை
சசுமநதாரெனறு தீர்ககதரிசியாகிய ஏசாயாசொன
னது நிறைவேறிறறு.

௰௮ பின்பு இயேசுவானவர் அநேகசனங்கள் தம்மைச்
சூழ்ந்திருக்கக்கண்டு, அக்கரைக்குப்போகக்கட்டளை
௰௯ யிட்டார்.—அப்பொழுது வேதபாரகனொருவன்
வந்து, அவரைநோக்கிப்போதகரே, நீரெங்கேபோனா
௨௰ லும், உம்மைப்பின்பற்றுவேனென்றான்.—அவனு
டனே இயேசுவானவர்சொன்னது, நரிகளுக்குக்கு
ழிகளும் ஆகாசத்துப்பறவைகளுக்குக்கூடுகளுமுண்
டு. மனிதனுடையகுமாரனோ தலைசாய்க்கிறதற்கு
இடமில்லாதவனாயிருக்கிறாரென்றார்.
௨௧ பின்னும் அவருடையசீஷர்களிலொருவன் அவரை
நோக்கி, ஆண்டவரே, முன்புநான்போய் என்தகப்
பனையடக்கம்பண்ணுவதற்கு உத்தரவுதாருமென்றா
௨௨ ன்.—அவனுடனே இயேசுவானவர்சொன்னது, மரி
த்தோர் தங்களிடத்தில மரித்தவர்களையடக்கம்பண்
ணட்டும், நீயோ என்பின்னேசென்றுவா என்றார்.
௨௩ பின்பு அவர்படவிற்பிரவேசிக்கிறபொழுது, சீஷர்க
௨௪ ள் அவர்பின்சென்று பிரவேசித்தார்கள்.—அப்பொ
ழுதுபடகு அலைகளினாலே மூடப்படத்தக்கதாய்க்
கடலிலே பெருங்காற்றுண்டாயிற்று. அவரோவெ
௨௫ னில் நித்திரைபண்ணினார்.—அப்பொழுது அவரு
டையசீஷர்கள்வந்து அவரையெழுப்பி, ஆண்டவரே,
எங்களையிரட்சிக்கவேண்டும், கெட்டுப்போகிறோ
௨௬ மேயென்றார்கள்.—அவர்களுடனே யவர்சொன்ன
து, ஆ! அற்பவிசுவாசிகளே, ஏன்பயப்படுகிறீர்க
ளென்றுசொல்லி, எழுந்து, காற்றுகளையுங்கடலையு
ம் அதட்டினார். உடனேமிகுந்த அமைதலுண்டா
௨௭ யிற்று.—சனங்கள் அதைக்கண்டு, காற்றுகளுங்கட
லும் இவருக்குக்கீழ்ப்படிகின்றன. இவர் எப்படிப்
பட்டவரோவென்று ஆச்சரியத்தோடே சொன்னார்
கள்.
௨௮ பின்பு அவர் அக்கரையிலே கெர்கேசேனர்தேசத்தி
லேசேர்ந்தார். அங்கேபேய்பிடித்திருக்கிறமனிதர்
களிரண்டுபேரிருந்தார்கள். அவர்களாலாரொருவனு
ம் அவ்வழியாய் நடக்கக்கூடாததாய், மிகுந்த துஷ்டராய்
ப்பிரேதக்கல்லறைகளிலிருந்து புறப்பட்டு, அவருக்

௨௯ கெதிராகவந்து.—ஆ! இயேசுவே, பராபரனுடைய
குமாரனே, எங்களுக்கும் உமக்குமென்ன, காலம்
வருமுன்னமே எங்களை வேதனைப்படுத்தும்படிக்கு
௩௰ நீரிங்கே வந்தீரோவென்று கூப்பிட்டார்கள்.—அல்லா
மலும் அவர்களுக்குச் சமீபமே தூரமாய் அநேகம் பன்
௩௧ றிகள் கூட்டமாய் மேய்ந்துகொண்டிருந்தன.—அப்
பொழுது பசாசுகள், அவருடனே, நீரெங்களைத்
துரத்துவீரானால், நாங்கள் அந்தப் பன்றிக்கூட்டத்திலே
பிரவேசிக்கும்படிக்கு, உத்தரவுகொடுமென்று வேண்
௩௨ டிக்கொண்டார்கள்.—போகலாமென்று அவர்களுக்
குச்சொன்னார். உடனே அவர்கள் புறப்பட்டுப்பன்
றிக்கூட்டத்துக்குட்பிரவேசித்தார்கள். அப்பொழு
து பன்றியெல்லாம் உயர்ந்தமேட்டிலிருந்து, கட
௩௩ லிலே பாய்ந்து, ஜலத்திலேமாண்டுபோயின.—அவைக
ளை மேய்த்தவர்களோ ஓடிப்பட்டணத்திலே சென்று,
அதையும் பசாசுபிடித்திருந்தவர்களுடைய சங்கதி
௩௪ யையும் அறிவித்தார்கள்.—அப்பொழுது பட்டண
த்தாரெல்லாரும் இயேசுவுக்கெதிராகப்புறப்பட்டு,
அவரைக்கண்டு, அவர் தங்கள் எல்லைகளைவிட்டுப்
போகும்படிக்கு அவரைவேண்டிக்கொண்டார்கள்.

# ௯. அதிகாரம்.

அப்பொழுது அவர் படகிலேறி, இக்கரைப்
௨ பட்டுத்தமதுபட்டணத்திலே வந்தார்.—அங்
கே படுக்கையின்மேல் கிடந்த ஒரு திமிர்வாதக்காரனை
அவரிடத்துக்குக் கொண்டுவந்தார்கள். இயேசுவான
வர் அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்
காரனை நோக்கி, மகனே திடமாயிரு. உன் பாவங்கள்
௩ மன்னிக்கப்பட்டனவென்றார்.—அங்கேயிருந்த வே
தபாரகரிற்சிலர் (அதைக்கேட்டு) இவன் தேவதூஷ
ணஞ்சொல்லுகிறானென்று எண்ணிக்கொண்டார்கள்
௪ இயேசுவானவர் அவர்களுடைய நினைவுகளையறிந்து

சொன்னதாவது, நீங்கள் உங்களிருதயங்களில் பொல்
௫ லாங்கானவைகளை நினைக்கிறதென்ன.—எது எளி
து. உன்பாவங்கள்மன்னிக்கப்பட்டனவென்றுகட்
டளையிடுகிறதோ, எழுந்திருந்துநடவென்றுகட்டளை
௬ யிடுகிறதோ,—மனிதனுடையகுமாரனாகிய நானே
பூமியிலே பாவங்களைமன்னிக்கிறதற்கு அதிகாரமு
டையவனென்பதை நீங்கள் அறியும்படிக்கு (நா
னிப்பொழுது செய்வதைப்பாருங்களென்று) சொ
ல்லி, திமிர்வாதக்காரனைநோக்கி, நீ யெழுந்திருந்து,
உன்படுக்கையையெடுத்துக்கொண்டு, உன்வீட்டுக்
௭ குப்போவென்றார்.—உடனேயவனெழுந்து தன்வீ
௮ ட்டுக்குப்போனான்.—அதைக்கண்டசனங்கள் ஆச்
சரியப்பட்டு, மனிதருக்கிப்படிப்பட்ட அதிகாரத்
௯ தைக்கொடுத்த பராபரனைப்புகழ்ந்தார்கள்.—இயே
சுவானவர் அவ்விடம்விட்டுப்புறப்பட்டுப்போகை
யில், ஆயத்துறையிலுக்கார்ந்திருக்கிற ஒருமனித
னைக்கண்டார், அவனுக்கு மத்தேயுவென்றுபேர்,
அவனுடனேயவர்சொன்னது, என்னைப்பின்பற்றிவா
வென்றார். அவனெழுந்திருந்து, அவர்பின்சென்
௰ றான்.—பின்பு அவர்வீட்டிலே பந்தியிருக்கையில்,
அநேகம் ஆயக்காரரும் பாவிகளும்வந்து, இயேசுவு
டனேயும், அவருடையசீஷர்களுடனேயுங்கூடப்பந்
௰௧ தியிருந்தார்கள்—(சில) பரிசேயர் அதைக்கண்டு,
அவருடையசீஷர்களைநோக்கி, என்னத்தினாலே உங்
கள்போதகர் ஆயக்காரரோடும் பாவிகளோடும்போ
௰௨ சனம் பண்ணுகிறாரென்றார்கள்.—இயேசுவானவர்
அதைக்கேட்டு, அவர்களுடனேசொன்னதாவது, சொ
ஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன் வேண்டுவதில்லை,
௰௩ வியாதியுள்ளவர்களுக்கே அவன்வேண்டும்.—மேலு
ம் பலியைப்பார்க்கிலும் இரக்கத்தைவிரும்புகிறே
னென்கிற (வாக்கியத்தினர்த்தத்தை,) நீங்கள்போய்ப்
படித்துக்கொள்ளுங்கள் அந்தப்படி நான் நீதிமான
களையல்ல, பாவிகளையேகுணப்படும்படிக்கு அழை
௰௪ க்கவந்தேனென்றார்.—அந்நேரத்திலே யோவானு
டையசீஷர்கள் அவரிடத்திலேவந்து, நாங்களும் பரி

சேயரும் அநேகந்தரம் உபவாசம்பண்ணியிருக்கி
றோம். உம்முடைய சீஷர்களோ உபவாசம்பண
௰௫ ணாமலிருக்கிறார்கள். அதேன் என்றார்கள்.—இயேசு
வானவர் அவர்களுக்குச் சொன்னதாவது, கலியாணத்
துக்குவந்திருக்கிறவர்கள் மணவாளனோடேயிருக்
கையில், துக்கப்படுவார்களா, மணவாளன் அவர்களை
விட்டு நீக்கப்படுங்காலம்வரும், அப்பொழுது அவர்
௰௬ கள் உபவாசம்பண்ணுவார்கள்.—ஒருவனுங்கோடித்
துண்டைப்பழயவஸ்திரத்தின்மேற் போட்டிணைக்க
மாட்டான். இணைத்தால், அதிலிணைத்தத் துண்டு அவ்
வஸ்திரத்திலேடுப்பட்டுப்போக, அதிகப்பொத்த
௰௭ லுண்டாகும்.—மேலுந்திராட்சப்பழங்களின
புதிய இரசத்தைப்பழய துருத்திகளில் வார்க்கமாட்
டார்கள். வார்த்தால், துருத்திகளகிழிந்துபோகும்.
இரசமுஞ்சிந்திப்போகும் துருத்திகளுங்கெட்டுப்
போகும். புதிய இரசத்தைப்புதிய துருத்திகளில்
வார்த்துவைத்தால், அப்பொழுது இரண்டும்பத்தி
ரப்பட்டிருக்குமென்றார்.
௰௮ அவரிவைகளை அவர்களோடேபேசுகையில் தலைவ
னொருவன்வந்து சாஷ்டாங்கமாய் அவரைவணங்கி,
இந்நேரத்திலே என்மகள் இறந்துபோனாள். அவள்
உயிர் அடையும்படிக்கு நீர் வந்து, அவள்மேல் உம
௰௯ து கையைவைக்கவேண்டுமென்றான்.—இயேசு எழு
ந்திருந்து, தமதுசீஷர்களோடேகூட அவன்பின்னே
௨௰ போனார்.—அவர்போகையிற் பன்னிரண்டு வருஷ
௨௧ மாய்ப்பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரியானது,—இவரு
டையவஸ்திரத்தைத்தொட்டமாத்திரமே, சொஸ்த
மடையலாமென்று எண்ணி, அவருக்குப்பின்னா
லேபோய், அவர்வஸ்திரத்தின் ஓரத்தைத்தொட்டா
௨௨ ள்,—அப்பொழுது இயேசுவானவர்திரும்பி அவ
ளைநோக்கி, மகளேதிடமாயிரு, உன்விசுவாசத்தினா
லேயுனக்குச்சுகமுண்டாயிற்றென்றார். அந்நேரமே
௨௩ அந்த ஸ்திரிசொஸ்தம் அடைந்தாள்.—பின்பு இயே
சுவானவர் அந்தத்தலைவன்வீட்டிற்சேர்ந்து, தாரையூது

௨௪ கிறவர்களையும் ஓலமிடுகிறசனங்களையுங்கண்டு—அவர்க
ளுடனே, இந்தப்பெண் இறந்துபோகாமல், நித்தி
ரைபண்ணுகிறாள். ஆகையால் வெளியேபோங்க
ளென்றார். அவர்களோ அவரைநோக்கி நகைத்தார்
௨௫ கள்—சனங்கள் வெளியேதுரத்தப்பட்டபின்பு, அவ
ர் உள்ளேபிரவேசித்து, அந்தப்பெண்ணின்கையை
௨௬ பிடித்தார் உடனேயவள் எழுந்திருந்தாள்.—அந்த
ச்செய்கையினாலே அவருடையகீர்த்தி அத்தேசத்தி
லெங்கும்பிரபலமாயிற்று.
௨௭ இயேசுவானவர் அவ்விடம்விட்டுப்போகையில், குரு
டரிருவர் அவர்பின்னேசென்று, ஆ! தாவீதின்குமா
ரனே, எங்களுக்கிரங்குமென்று கூப்பிட்டார்கள்.
௨௮ அவர்வீட்டிலேவந்தபின்பு, அந்தக்குருடர் அவரிடத்
துக்குவந்தார்கள். இயேசு அவர்களைநோக்கி, இப்
படிச்செய்ய எனக்குவல்லமையுண்டென்று விசுவா
சிக்கிறீர்களோவென்றார். ஆண்டவரே, விசுவாசிக்கி
௨௯ றோமென்றார்கள்,—அப்பொழுதவர் அவர்களுடை
ய கண்களைத்தொட்டு, உங்கள் விசுவாசத்தின்படி,
௩௰ உங்களுக்காகக்கடவதென்றார்.—உடனே யவர்களு
டையகண்கள்திறக்கப்பட்டன. பின்பு இயேசுவான
வர் அவர்களைநோக்கி, இவைகளைஒருவனுக்கும்
அறிவிக்கவேண்டாமென்று கெட்டியாய்க்கட்டளை
௩௧ யிட்டார்.—அவர்களோ புறப்பட்டு, அத்தேசத்தி
லெங்கும் அவருடைய கீர்த்தியைப்பிரசித்தம்பண்
ணினார்கள்.
௩௨ அவர்கள் புறப்பட்டுப்போகையில், பசாசுபிடித்தி
ருக்கிற ஊமையனை அவரிடத்துக்குக்கொண்டுவந்
௩௩ தார்கள்.—பசாசு (அவராலே,) துரத்தப்பட்டபின்
பு, ஊமையன் பேசினான். (அதைக்கண்ட) சனங்
கள் ஆச்சரியப்பட்டு, இப்படியாக இஸ்ரவேலருக்கு
ள்ளே ஒருக்காலுங் காணப்பட்டதில்லை யென்றார்
௩௪ கள்.—பரிசேயரோவெனில் பசாசுகளுடையதலைவ
னாலேயிவன்பசாசுகளைத்துரத்துகிறானென்றார்கள்.
௩௫ பின்பு இயேசுவானவர் சகல பட்டணங்களையும்
கிராமங்களையுஞ்சுற்றிநடந்து செப ஆலயங்களிலே

(சனஙகளுககுப)போதகமபணணி, இராசசியததைக குறிதத சுவிசேஷததைப பிரசஙகிதது, சனஙகளுககுணடான எநத வியாதியையும எநதநோயையும
௩௬ நீககி, அவர்களைசசுகமாககினூர்.—அபபொழுதவர் சனஙகளைபபார்தது, மேயபபனிலலாத ஆடுகளைப போல அவர்கள சோர்நதுபோயசசிதறுணடவர்க ளாயிருநதபடியால, அவர்களைககுறிதது மிகவுமமன துருகினதும தது சீஷர்களுடனே சொனனதாவது, அறுபபு மிகுதியாயிருககினறது, வேலையாடகளோ
௩௭ சிலர் மாததிரமிருககிறூர்கள,—ஆகலால, அறுபபுக கெசமான் தமது அறுபபுககுவேலையாடகளையனுப பவேணடுமெனறு, நீஙகள அவரைவேணடிககொள ளுஙகளெனனுர்.

# ௰. அதிகாரம்.

அபபொழுது அவர் தமமுடையபனனிரணடு சீஷர்களைததமமிடததில அழைதது, அசுத தமான ஆவிகளைததுரததவுஞ, சகலவிதமான வியா திகளையும நோயகளையும நீககவும, அவர்களுககு அதி
௨ காரஙகொடுததார்.—அபபோஸதலர்களாகிய அநத பனனிரணடு சீஷர்களயாரெனில, முநதினவனுகிய பேதுரு எனனபபடட சீமோன, அவனுடைய சகோதரனுகிய அநதிரேயா, செபெதேயுவின குமார ன யாககோபு, அவனுடையசகோதரன யொவான.—
௩ பிலிபபு, பர்தலோமேயு, தோமா, ஆயககாரனுன மததேயு, அலபேயின குமாரன யாககோபு, ததேயு
௪ வெனனும மறுநாமமுளள லேபேயு.—கானுனிய சீமோன, இயேசுவானவரைககாடடிககொடுததவனுன யூதா இஸகாரியோதது, எனனபபடடவர்களே.
௫ இயேசுவானவர் அநதபபனனிருவரையனுபப, அவ ர்களுககுக கடடளையிடடுசசொனனதாவது, நீஙகள
௬ புறதேசததாரிடததுககுபபோகாமலும.—சமாரி யருடையபடடணஙகளிற் பிரவேசியாமலும, காணு மறபோன ஆடுகளுககொபபாயிருககிற இஸரவேல

குடுமபததாரிடததுககுபபுறபபடடுபபோய,—
௭ பரலோக இராசசியததின ஆளுகைசமீபமாயவநத
௮ தெனறு கூறி,—வியாதிபபடடவர்களைசசுகமாககி
சகுஷ்டரோகிகளைச சுததம பணணி, மரிததோரை
௯ யெழுபபி, பசாசுகளைத துரததுஙகள.—நீஙகளுக
மாறிலலாமற பெறறுககொணடீர்கள, கைமாறில
லாமற கொடுஙகள. வேலைசெயகிறவன தனககுவே
ணடிய அஹாரவஸ்திரஙகளைபபெறுமபடிககுபபாத
௰ திரவானானபடியினாலே,—நீஙகளசசைகளிலபொன
னையாகிலும வெளளியையாகிலும, செமபையாகி
லும, வழிககுபபையையாகிலும இரணடஙகிகளை
யாகிலும பாதரட்சைகளையாகிலும தடியையாகி
லும உஙகளுககாகததேடிவைககவேணடாம. அல
லாமலும எநதபபடடணததிலும கிராமததிலும,—
௰௧ நீஙகள பிரவேசிககுமபொழுது, அதிலேயிருககிற
பாததிரவானினனுஎனறு விசாரிததுககொணடு,
நீஙகள புறபபடுமளவும அவனிடததிலிருஙகள.—
௰௨ அநத வீடடுககுட பிரவேசிககிறபொழுது, நீஙகள
அதிலிருககிறவர்களை வாழததிக கொளளுஙகள,—
௰௩ அநதககுடுமபததார் பாததிரவானகளாயிருநதால,
நீஙகள அவர்களுககுசசெயத வாழததுதல அவர்களை
சசேரககடவது பாததிரவானகளலலாதிருநதால, அந
தவாழததுதல உஙகளிடமாயததிருமபககடவது.—
௰௪ எஙகேயாகிலும அவர்கள, உஙகளை அஙகீகரிததுக
கொளளாமலும உஙகள வசனஙகளுககுசசெவிகொ
டாமலுமிருநதால, நீஙகள அநதவீடடையாவது பட
டணததையாவது விடடுபபுறபபடுகையில, உஙகள
௰௫ காலகளிலுளள தூளை உதறிபபோடுஙகள.—நியா
யததீர்பபு நாளிலே சோதோம கொமோறா தேசத
தாரைபபார்ககிலும அநதபபடடணததாருககு அதி
கதணடனையிருககுமெனறு மெயயாகவே உஙகளு
ககுசசொலலுகிறேன.
௰௬ பாருஙகள ஆடுகளை ஓநாயகளுககுளளே (யனுப
புகிறதுபோல,) உஙகளையனுபபுகிறேன. ஆகை
யால, நீஙகள பாமபுகளைபபோலவிவேகமுளளவர்க

ளாயும், புறாக்களைப்போலக் கபடமில்லாதவர்களாயு
௰௭ மிருக்கவேண்டும்.—அப்படியே நீங்கள் மனிதர்க
ளிடத்தில் சாவதானமாயிருங்கள். என்னத்தினாலெ
ன்றால், (உங்களைத் துலைப்படுத்தும்படிக்கு,) உங்க
ளைப்பெரிய சங்கத்தாருக்கு ஒப்புக்கொடுத்து, தங்க
ள் ஆலயங்களிலேயுங்களை வாரினால் அடிப்பார்
௰௮ கள்.—என்னிமித்தம் நீங்கள் அதிபதிகளிடத்துக்கும்
ராசாக்களிடத்துக்குங்கொண்டுபோகப்பட்டு, அவ
ர்களுக்கும் புறதேசத்தாருக்கும் முன்பாகச்சாட்சி
௰௯ களாயிருப்பீர்கள்.—அவர்கள் உங்களையொப்புக்கொ
டுக்கும்பொழுது, நீங்கள் பேசவேண்டியது உங்க
ளுக்கருளிச்செய்யப்படுமாகையால், எப்படி என்ன
௨௰ ப்பேசுவோமென்று கவலைப்படாதிருங்கள்.—பேசு
கிறவர்கள் நீங்களல்ல, உங்கள் பிதாவின் ஆவி உங்களி
லிருந்து பேசுகிறவர்.

௨௧ அல்லாமலும் ஒருவன் தன் சகோதரனையுந் த
கப்பன் தன் பிள்ளையையும் மரணத்துக்கொப்புக்
கொடுப்பார்கள். பெற்றோரைப் பிள்ளைகள் விரோதித்
து, அவர்கள் மரணம் அடையும்படிக்குச்செய்வி
௨௨ ப்பார்கள்.— என்னுடைய நாமத்தினிமித்தம் நீங்கள்
எல்லாராலும் பகைக்கப்பட்டிருப்பீர்கள். எப்படி
யும் முடிவுபரியந்தம் நிலைத்திருக்கிறவனே இரட்சிக்
௨௩ கப்படுவான்.—அல்லாமலும் மனிதனுடைய குமா
ரனாகிய நானவருமளவுக்கும், நீங்கள் இஸ்ரவேலரு
டைய பட்டணங்களை வலமாகக்கடந்துபோயவமா
ட்டீர்களென்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்லு
கிறேன். ஆதலால் ஒருபட்டணத்திலேயுங்களைத் துலை
ப்படுத்தினார்களானால், மறுபட்டணத்துக்கோடிப்
௨௪ போங்கள்.—சீஷனானவன் போதகனிலும் அடிமைப்
பட்டவன் தன் எசமானிலும் மேற்பட்டவர்கள
௨௫ ல்ல.—சீஷன் தன்போதகனைப்போலவும் அடிமைப்
பட்டவன் தன் எசமானைப்போலவுமிருக்கிறது அவர்
களுக்குப்போதுமே. வீட்டெசமானைப்பசாசென
று அவர்கள் சொல்லியிருக்க, அவனுடைய வீட்டாரை
அதிகமாய் அப்படியே சொல்லுவார்களல்லவோ.—

௨௬ ஆகிலும், வெளியாக்கப்படாத மறைபொருளில்லா
தபடியினாலும் அறியப்படாத இரகசியமுமில்ல
ாதபடியினாலும் நீங்கள் அவர்களுக்குப் பயப்படா
௨௭ திருப்பீர்களாக.—நான் உங்களுக்கு இருளிலே சொல்லு
கிறதை நீங்கள் வெளிச்சத்திலே சொல்லுங்கள் நீங்கள்
இரகசியமாய்க் கேட்கிறதை வீடுகளின்மேலிருந்து பிரசித்த
ஞ்செய்யுங்கள்.
௨௮ அல்லாமலும் ஆத்துமாவைக் கொல்லச் செய்யத் திரா
ணியில்லாமல் சரீரத்தைமாத்திரங் கொல்லுகிறவர்
களுக்கு நீங்கள் பயப்படவேண்டாம் ஆத்துமாவை
யுஞ் சரீரத்தையுமாக நரகத்திலே (தள்ளிக்) கெடுக்கவல்ல
௨௯ லவராகிய (பராபரனுக்குச்) பயப்படுங்கள்.—ஒருகா
சுக்கிரண்டு அடைக்கலான் குருவிகளை விற்கிறார்களல்ல
வோ. ஆகிலும் உங்கள் பிதாவின் உத்தரவில்லாமல்
௩௰ அவைகளில் ஒன்றாகிலுந் தரையிலே விழாது. அல்லாம
லும் உங்கள் தலையின் மயிரெல்லாம் எண்ணப்பட்டி
௩௧ ருக்கின்றது.—ஆதலால் பயப்படாதிருங்கள். அநே
கம் அடைக்கலான் குருவிகளைப்பார்க்கிலும் நீங்கள்
மேன்மையாயிருக்கிறீர்கள்.
௩௨ அப்படியிருக்க, மனிதர்களுக்குமுன்பாக என்னை
யறிக்கைபண்ணுகிறவனெவனோ, அவனை நானும்
பரமண்டலங்களிலிருக்கிற என்பிதாமுன்பாக அறிக்
௩௩ கைபண்ணுவேன்,—மனிதர்முன்பாக என்னைமறுதலி
க்கிறவனெவனோ நானும் பரமண்டலங்களிலிருக்கிற
என்பிதாமுன்பாகமறுதலிப்பேன்.
௩௪ பூமியின்மேல் சமாதானத்தை வரப்பண்ணவந்தே
னென்றெண்ணிக்கொள்ளாதிருங்கள். சமாதானத்
௩௫ தையல்ல, சண்டையைவரப்பண்ணவந்தேன்,—எப்
படியெனில், குமாரன் தன்தகப்பனையும் மகள்தன்
தாயையும் மருமகள் தன்மாமியையும் விட்டுப்
௩௬ பிரிந்துபோகப்பண்ண வந்தேன்.—அப்படி ஒருவ
னுடைய குடும்பத்தாரே அவனுக்குச் சத்துருக்களா
௩௭ யிருப்பார்கள்.—என்னைப்பார்க்கிலுந் தகப்பனையா
வது தாயையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன் என
க்குப் பாத்திரனல்ல. என்னைப்பார்க்கிலும் மகனை

யாவது மகளையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன்
௩௮ எனக்குப் பாத்திரனல்ல.—அல்லாமலுந் தன் சிலு
வையைத் தெடுத்துக்கொண்டு, என்பின்னே செல்
௩௯ லாதவன் எனக்குப் பாத்திரனல்ல.—தன் சீவனைக் காக்
கிறவன் அதை இழந்துபோவான். என்னிமித்தந் தன்
சீவனை இழந்துபோகிறவனோ அதைக் காப்பான்.
௪௰ உங்களையேற்றுக்கொள்ளுகிறவன் என்னையேற்றுக்
கொள்ளுகிறான். என்னையேற்றுக்கொள்ளுகிறவனோ
என்னையனுப்பினவரை யேற்றுக்கொள்ளுகிறான்.—
௪௧ தீர்க்கதரிசியென்கிற நாமத்தினிமித்தம் ஒரு தீர்க்க
தரிசியையேற்றுக்கொள்ளுகிறவன் தீர்க்கதரிசிக்குரிய
பலனையடைவான். நீதிமானென்கிற நாமத்தினிமித்
தம் நீதிமானையேற்றுக்கொள்ளுகிறவன் நீதிமானுக்
௪௨ குரிய பலனையடைவான்,—இந்தச் சிறியவர்களிலொ
ருவன் எனக்குச் சீஷனாயிருக்கிறதினிமித்தம் அவனுக்
கு ஒரு கலசத் தண்ணீர் மாத்திரந் தாகத்துக்குக் கொ
டுக்கிறவன் தன் பலனை இழந்துபோகானென்று மெய்
யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

# ௰௧. அதிகாரம்.

இயேசுவானவர் தம்முடைய பன்னிரண்டு சீஷருக்குங்
கட்டளைகொடுத்துமுடித்தபின்பு, கலிலேயா
பட்டணங்களிலுள்ள (சனங்களுக்கு) உபதேசம்
பண்ணிப் பிரசங்கிக்கும்படிக்கு, அவ்விடம் விட்டு
௨ அப்புறம் பிரயாணமாய்ப் போனார்.—அத்தருணத்
திலே காவலிலிருந்த யோவான் கிறிஸ்துவின் கிரியை
களைக் கேள்விப்பட்டுத் தன் சீஷரிலிரண்டுபேரை ய
௩ ழைத்து,—நீங்கள் அவரிடத்துக்குப் போய், வருவா
ரென்று சொல்லியிருக்கிற கிறிஸ்து நீர்தாமோ, அல்
லது வேறொருவர் வரக் காத்திருக்கவேண்டுமோ
வென்று அவரிடத்திற் கேட்டுக்கொண்டுவாருங்களெ
௪ ன்று சொல்லியனுப்பினான்.—அவர்கள் அப்படிவந்து

கேட்டபொழுது, இயேசு அவர்களுக்குமாறுத்தரமா
கச்சொன்னதாவது, நீங்கள் காணத்தக்கதாக, என்னா
லே குருடர் பார்வையடைகிறார்கள். சப்பாணிகள்
நடக்கிறார்கள், குஷ்டரோகிகள் சுத்தம் அடைகிறார்
கள். செவிடர் கேட்கிறார்கள் மரித்தோர் எழுந்திருக்
கிறார்கள். எளியவர்களுக்குச் சுவிசேஷம் பிரசங்கிக்க
௫ ப்படுகின்றது.—இப்படி நீங்கள் கேட்டுக்காணுகிற
௬ வைகளை யோவானுக்குப் போயறிவியுங்கள்.—அல்லா
மலும் என்னைக்குறித்து இலச்சையடையாதிருக்கிற
வன் பாக்கியவானென்று சொல்லி அவர்களையனுப்பி
௭ னார்—அவர்கள் போனபின்பு, இயேசுவானவர் சனங்
களைநோக்கி, யோவானைக்குறித்துச் சொன்னதாவது,
நீங்கள் வனாந்திரத்திலே காற்றிலே அடித்தலைக்கப்
௮ படும் நாணலைப்பார்க்கப் புறப்பட்டீர்களா.—அல்
லது, மெல்லிய வஸ்திரங்களைத் தரித்திருக்கி
ற மனிதனைப்பார்க்கப்புறப்பட்டீர்களா, மெல்லிய
வஸ்திரங்களையுடுத்தியிருக்கிறவர்கள் அரசர் மாளிகைக
௯ ளிலிருக்கிறார்கள்.—அல்லது தீர்க்கதரிசியைப்பார்க்
கப்புறப்பட்டீர்களா (கேளுங்கள்) இதோ நான் என்
னுடைய தூதனை உமக்குமுன்பாக அனுப்புகிறேன்,
அவன் உமக்குமுன்னே உம்முடைய மார்க்கத்தை
யெத்தனம்பண்ணுவானென்று ஒருவனைக்குறித்தெ
௰ ழுதியிருக்கின்றதே அவனிவன்றான்.—ஆகையால் த
தீர்க்கதரிசியிலும் அதிகமேன்மையுள்ளவனையே (பா
ர்த்தீர்கள்) என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
௰௧ அல்லாமலும் ஸ்திரீகளிடத்திற் பிறந்தவர்களில் யோ
வான்ஸ்நானனைப்பார்க்கிலும் பெரியவனொருவனு
ம் எழும்பினதில்லையென்று மெய்யாய் உங்களுக்கு
ச்சொல்லுகிறேன். ஆகிலும் பரலோக இராச்சியத்
திற்சிறியவனானவன் அவனைப்பார்க்கிலும் பெரிய
௰௨ வனாயிருக்கிறான்.—அல்லாமலும் யோவான்ஸ்நான
ன் தோன்றின்காலமுதற்கொண்டு இதுவரைக்கும்
பரலோக இராச்சியம் பலவந்தப்படுகின்றது. பல
வந்தம்பண்ணுகிறவர்கள் அதைப் பிடித்துக்கொள்
௰௩ ளுகிறார்கள்.—எல்லாத்தீர்க்கதரிசிகளும் நியாயப்பிர

மாணததைசசொனனவரும (அதை) யோவானனவனே
௧௪ கருந தீர்க்கதரிசனமாய அறிவிததார்கள.—வருவா
னெனறுசொலலியிருக்கிறஎலியா அவனே. மனசிரு
நதால நீஙகள அதையறிநதுகொளளககடவீர்கள.—
௧௫ கேட்கிறதறகுக காதுளளவன கேட்க்கடவன.—
௧௬ இநதசசநததியை ஆருககுநிகர் சொலவேன்-சநதை
களில உளுககார்நது தஙகள தோழரை நோககி
௧௭ உஙகளுககாக ஊதினோம.—நீஙகளோ கூததாடவில
லை. உஙகளுககாகபபுலமபினோம நீஙகளோமார்பிலே
அடிககவிலலையெனறு, சொலலிககூபபிடுகிறபிளளைக
௧௮ ளுககு ஒபபாயிருககிறார்கள. — எபபடியெனறால,
யோவானவநது(மறறவர்களைபபோல)பபோசனபா
னமபணணுமலிருநதான.(அதையிவர்களகணடு)பசா
௧௯ சைக கொணடிருககிறானெனகிறார்கள.— மனிதனு
டைய குமாரன வநது (மறறவர்களைபபோல)ப
போசனபானமபணணுகிறான-அதையிவர்களகணடு
இதோ பெருநதீனிககாரனெனறும குடிககிறவனெ
னறும, ஆயககாரருககும பாவிகளுககும சிநேகித
னெனறுஞசொலலுகிறார்கள - ஆனாலும ஞானமான
து தனனையடைநதவர்களாலே நீதியாய எணணபப
௨௰ டுமெனறார்.—அபபொழுது அவர்தமதுபலததசெ
யலைகளில அநேகஙகளைககணடபடடணததார் குண
பபடாம லிருநதபடியினாலே, அவர்களைக கடிநது
௨௧ கொளளததொடஙகிச சொனனதாவது. — ஐயோ,
கோராசினபடடணததாரே, உஙகளுககுவேதனைவரு
ம - ஐயோ, பெதசாயிதாபபடடணததாரே, உஙகளு
ககும வேதனைவரும- உஙகளுககுளளே நடநதபலத
தசெயலைகளதீரு-சீதோனபபடடணததாருககுளளே
நடநதன்வாகில, அவர்கள சீககிரமாய(தஙகததினா
லே,)யிரடடையுடுததிசசாமபலில உளுககார்நது, கு
௨௨ ணபபடடிருபபார்கள.—ஆதலால நியாயததீர்பபு
நாளிலேஅவர்களுககுவருநதணடிபபு எளிதாயிருககு
ம-நீஙகளோஅதிக தணடிபபை யடைவீர்களெனறு
௨௩ உஙகளுககுசசொலலுகிறேன.—வானபரியநதமுய
ர்நத கபபர்நாகூமபடடணததாரே - ஐயோ, பாதாள

பரியந்தந் தாழ்த்தப்படுவீர்கள் உங்களுக்குள்ளே நட
ந்த பலத்த செய்கைகள் சோதோமப் பட்டணத்தாருக்கு
ள்ளே நடந்தனவானால் அவர்களுடைய பட்டணம் இந்
௨௪ நாள்வரைக்கும் இருக்கும்.— ஆதலால் நியாயத்தீர்ப்
பு நாளிலே அவர்களுக்கு வருந்தண்டிப்பு எளிதாயிருக்
கும். நீங்களோ அதிகத்தண்டிப்பையடைவீர்களென்
௨௫ று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.— அக்கால
த்திலே இயேசுவானவர் சொன்னதாவது: பிதாவே,
வானத்தையும் பூமியையும் ஆளுகிறவரே, நீர் இவை
களை (லோக) ஞானிகளுக்கும் கல்விமான்களுக்கும்
மறைத்துக் குழந்தைகளுக்கு வெளிப்படுத்தினபடி
௨௬ யினாலே, உம்மைத் துதிக்கிறேன்.— ஆ! பிதாவே இ
ப்படியே உமக்குப் பிரியமாயிருந்ததென்றார்.—
௨௭ அல்லாமலும், சகலமும் என்பிதாவினாலே எனக்கு
ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கின்றது. பிதாதவிர, மற்
றொருவனுங் குமாரனையறியான். குமாரன் தவிர மற்
றொருவனும் பிதாவையறியான். மேலும் எவனுக்குக்
குமாரன் அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிற
௨௮ ரோ அவனும் பிதாவையறிவான்.— வருத்தப்பட்டுப்
பாரஞ்சுமந்துகொள்ளுகிறவர்களாகிய நீங்களெல்லா
ரும் என்னிடத்தில் வாருங்கள். நான் உங்களுக்கு ஆ
௨௯ றுதல்செய்வேன்.— நான் சாந்தமாயும் மனத்தாழ்
மையாயுமிருக்கிறபடியினாலும் நான் வைக்கிற நுகத்
தடி மெதுவாயும் நான் ஏற்றுகிற சுமை இலேசாயு
௩௰ மிருக்கிறபடியினாலும்.— நீங்கள் என்னுடைய நுக
த்தடியை ஏற்றுக்கொண்டு, என்னிடத்தில் கற்றுக்
கொள்ளுங்கள். அப்பொழுது உங்களாத்துமாக்க
ளுக்கு ஆறுதல் கிடைக்குமென்றார்.

## ௰௨. அதிகாரம்.

அக்காலத்திலே ஓய்வுநாளிலே இயேசுவானவர்
பயிர்வழியே போனார். அப்பொழுது அவரு
டைய சீஷர் பசியாயிருந்தபடியினாலே, கதிர்களைக்
௨ கொய்து சாப்பிடத்தொடங்கினார்கள்.— அதைக்கண்

௰௩ ஏனென்றால் * இரக்கஞ்செய்யாதவனுக்கு இரக்கமில்லாத ஞாயத்தீர்ப்புண்டாம். ஞாயத்தீர்ப்புக்கெதிராக இரக்கம் மேன்மைபாராட்டும்.

* மத. ௰௮, ௨௮—௩௫.

## ¶ கிரியைகளில்லாத விசுவாசஞ்செத்ததென்பது.

௰௪ என் சகோதரரே, * ஒருத்தன் தனக்கு விசுவாசம் உண்டென்று சொல்லியுங் கிரியைகளில்லாதிருந்தால், பிரயோசனமென்ன, அந்த விசுவாசம் அவனை இரட்சிக்குமோ.

* மத. ௭, ௨௧.

௰௫ ஒரு சகோதரன் அல்லது ஒரு சகோதரி அம்மணமானவர்களும் அனுதினப்பிழைப்பற்றவர்களுமாயிருக்கும்போது,

௰௬ உங்களில் ஒருத்தன் அவர்களுடனே: க்ஷேமசமாதானத்தோடே போய், குளிர்காய்ந்து பசியாறுங்கோவென்று சொல்லியுஞ் சரீரத்துக்குத் தேவையானவைகளை அவர்களுக்குக் கொடாதே போனால், பிரயோசனமென்ன.

௰௭ அப்படியே விசுவாசமுங் கிரியைகளில்லாதிருந்தால் தன்னிலேதானே செத்ததாயிருக்குது.

௰௮ ஆனால் ஒருத்தன்: உனக்கு விசுவாசம் உண்டு, எனக்குக் கிரியைகளுண்டு, உன் விசுவாசத்தை உன் கிரியைகளால் எனக்குக் காண்பி, நான் என் கிரியைகளால் என் விசுவாசத்தை உனக்குக் காண்பிப்பேன் என்பானே.

௰௯ பரபரன் ஒருவனென்று விசுவாசிக்கிறாய், அப்படி நீ செய்கிறது நல்லது, அதைப் பிசாசுகளும் விசுவாசித்து அருக்களிக்குது.

௨௰ ஆனால் அவத்தமனுஷனே, கிரியைகளில்லாத விசுவாசஞ்செத்ததென்றறிய உனக்கு மனசுண்டோ.

௨௧ நம்முடைய பிதாவாகிய ஆபிரகாந்தன் குமாரன் இசாக்கைப் பெலிபீடத்தின் மேல் கொண்டுவந்தேறி, கிரியைகளினாலேயல்லவோ நீதிவிளங்கப்பட்டான்.

* க. மோ. ௨௨, ௯—௰௨.

௨௨ விசுவாசம் அவன் கிரியைகளோடே கூட நடந்ததாயிருந்து, கிரியைகளினாலே விசுவாசம் நிறைவேறினதென்று பார்க்கிறாயே.

௨௩ இபபடியே: * ஆபிரகாம பராபரனை விசுவாசித தான. அது அவனுககு நீதியாக எணணபபடடதென கிற வேத எழுததுநிறைவேறிறு, † பராபரனுடைய சிநே கிதனெனனபபடடான.

* ௧. மோ. ௰௫, ௬. † ஏசா. ௪௧, ௮.

௨௪ ஆனதுகொணடு, விசுவாசததினாலேமாததிரமலல கிரியைகளினாலே மனுஷன நீதிவிளஙகபபடுகிறானெனறு பார்ககிறீர்களே.

௨௫ அபபடியே ராகாபபெனகிறவேசியும, * தூதாக களையேறறுககொணடு மறுவழியாய அனுபபிவிடடு, கிரி யைகளினாலேயலலவோ நீதிவிளஙகபபடடாள.

* யோசு. ௨, ௧. ௬.

௨௬ எபபடியெனறால ஆவியிலலாத சரீரஞசெததாயிருக குமாபபோலே, கிரியைகளிலலாத விசுவாசமுஞசெததா யிருககுது.

## ௩. அதிகாரம்.

¶ நாவினுடைய பாவஙகளினபேரிலே
முறையிடடு, மெயஞஞானததின
இலடசணஙகளைககாண
பித்த[illegible].

என சகோதரரே, அதிக ஆககினையடைவோமெனறறிந து, உஙகளிலநேகர் போதகராகாதிருஙகோள.

௨ எனனெனறால எலலாருமபெருவாய இடறுகிறோம, பேசசிலே ஒருததன இடறாதவனாயிருநதால, அவன சரீ ரமனைததையுஙகடிவாளமபிடிதது அடககததககததான மனுஷன.

௩ இதோ குதிரைகளநமககுபபடியுமபடிககு அதுகள வாயகளிலககடிவாளஙகளைபபோடடு, அதுகளுடையமு ழுச்சரீரததையுநதிருபபி நடததுகிறோம.

௪ இதோ கடுஙகாறறுகளால அடிபபடுகிற இததனைபெ ரிய கபபலகளுமமெததச்சினனசுககானாலே, நடததுகி றவன மனசு எவவிடததுககு நோககுதோ, அவவிடதது ககு நேராகததிருபபபபடுகுது.

௫ அப்படிப்போலே *நாவும், சின்ன அவயவமாயிருந்தும், பெரிய அமளிபண்ணும். இதோ, சின்ன நெருப்பு எத்தனை பெரிய காட்டைக் கொளுத்திவிடும்.

* சங்கீ. ௰௨, ௩—௫. ௫௰, ௫. ௭௩, ௮—௯.

௬ நாவும் நெருப்புத்தான், அது அநியாயமுள்ள லோகம். இப்படி * சரீரமனைத்தையுங் கறைப்படுத்தி, நம்முடைய ஆயிசின் உருளையைக் கொளுத்துகிறதும் நரகத்தாலே கொளுத்தப்படுகிறதுமான நாவு நம்முடைய அவயவங்களுக்குள்ளே யிருக்குது.

* மத். ௰௫, ௰௧. ௰௮. ௰௯.

௭ எல்லாக் காட்டுமிருகங்கள் பறவைகள் ஊருகிறவை செந்துக்கள் நீர்வாழுஞ்சாதிகளுடைய சுபாவமுமோ மனுஷசுபாவத்தாலே படியப்பண்ணப்படும், படியப்பண்ணப்பட்டதுமுண்டு.

௮ ஆனாலும் அடங்காப்பொல்லாப்புஞ் சாவுவிஷமும் நிறைந்திருக்கிற நாவை மனுஷரில் ஒருத்தனும் படியப்பண்ணமாட்டான்.

௯ பராபரனும் பிதாவுமானவரை அதினாலே ஸ்தோத்திரிக்கிறோம், பராபரனுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்ட மனுஷரை அதினாலேயுஞ் சபிக்கிறோம்.

௰ ஒரே வாயிலுமிருந்து ஸ்தோத்திரமுஞ் சாபமும் புறப்படுகுது. என் சகோதரரே, இதுகளிப்படி நடக்கலாகாது.

௰௧ ஊற்று ஒரே துவாரத்திலிருந்து தித்திப்பையுங் கசப்பையுஞ் சுரக்கப்பண்ணுகுமோ.

௰௨ என் சகோதரரே, அத்திமரம் ஒலிவப்பழங்களையும் அல்லது திராட்சச்செடி அத்திப்பழங்களையுந் தரக்கூடுமோ. அப்படிப்போலே ஒரு ஊற்றும் உப்புச்சலத்தையும் நல்ல சலத்தையுந் தரக்கூடாது.

௰௩ உங்களில் எவன் ஞானியும் அறிவாளியுமாயிருக்கிறானோ, * அவன் நல் நடக்கையினாலே தன் கிரிகைகளை ஞானத்தினுடைய மெத்தனவிலே காண்பிக்கக்கடவன்.

* எபே. ௫, ௮. ௬. ௰௫.

௰௪ உங்கள் இருதயத்திலக் கசப்பான பொறாமையு

யும் விரோதத்தையும் வைத்திருந்தீர்களேயாகில், உண்மைக்குப்பின்ன பெருமையையும் பொய்யையுஞ் சொல்லாதேயுங்கோள்.

௰௫ இது உயர இருந்திறங்கின ஞானமாயிராமல், இலவுகீகமுஞ் ஜெந்மசுபாவகுணமும் பேய்த்தனமுமானது.

௰௬ ஏனென்றால் பொறாமையுஞ் சண்டையும் எங்கேயோ அங்கே கலாதியும் எல்லாத் துர்ச்செய்கையுமுண்டு.

௰௭ உயர இருந்து வருகிற ஞானமோவென்றால் முந்தலாவது கற்புள்ளதும், பிற்பாடு சமாதானஞ் சாந்தம் இணக்கமுமுள்ளதும், இரக்கத்தாலும் நற்கனிகளாலும் நிறைந்ததும், பாரபட்சமில்லாததும் மாயமற்றதுமாயிருக்குது.

௰௮ * நீதியின் கனியோவென்றால் சமாதானத்தை நடப்பிக்கிறவர்களுக்குச் சமாதானத்திலே விதைக்கப்பட்டு முளைக்கும். * ஏசா. ௩௨, ௰௭—௰௮.

# ௪ அதிகாரம்.

¶ மாங்கிஷ இச்சைகளை விட்டுக் குணப்படச் சொன்ன கண்டிப்புள்ள புத்தி.

உங்களுக்குள்ளே யுத்தங்களுஞ் சண்டைகளும் எதினாலே வருகுது, உங்கள் அவயவங்களில் * போர்செய்யுஞ் செல்விக்கையிச்சைகளாலல்லவோ.

* ௧ பேது. ௨, ௰௧.

௨ நீங்கள் இச்சித்தும் உங்களுக்கில்லை, நீங்கள் பொறாமையும் எரிச்சலுமாயிருந்தும் அடையமாட்டீர்கள். சண்டையும் யுத்தமும் பண்ணுகிறீர்கள், ஆனால் நீங்கள் வேண்டிக்கொள்ளாதிருக்கிறதினாலே உங்களுக்கில்லை.

௩ நீங்கள் வேண்டிக்கொண்டும், உங்கள் செல்வங்களில் நீங்கள் செலவழிக்கவேணுமென்று * ஆகாதவிதமாய் வேண்டிக்கொள்ளுகையால், அடையீர்கள்.

* ஏசா. ௧, ௰௫. யோவ. ௯, ௩௧.

௪ விபசாரரே, விபசாரிகளே, * லோக சிநேகம் பராபரனைப் பகைக்கிற பகையென்றறியீர்களோ, ஆகையால் எவனாகிலும் லோக சிநேகிதனாயிருக்கமனதானால், பராபரனுக்குப் பகைஞனாயிருக்கிறான்.

* ௧. யோவ. ௨, ௰௫—௰௬.

௫ அல்லது: * நமக்குள் வாசமாயிருக்கிற ஆவியானவர் பொறாமைக்கு விரோதமாய் இச்சிக்கிறாரென்கிறதை வேத எழுத்து வீணாய்ச் சொல்லுதென்று நினைக்கிறீர்களோ
* ௪. மோ. ௰௪, ௨௯.

௬ அதையிட அதிக தயவை * அளிக்கிறார், ஆகையினாலே: † பராபரன் பெருமையுள்ளவர்களுக்கு எதிர்த்து, தாழ்மையுள்ளவர்களுக்கோ கிருபையையளிக்கிறாரென்று சொல்லியிருக்குது. * ௧. பேது. ௫, ௫. † வாக. ௩, ௩௪.

௭ ஆகையால் பராபரனுக்குக் கீழ்ப்படியுங்கோள், * பிசாசோடெதிர்த்து நில்லுங்கோள், அப்போது † அது உங்களைவிட்டோடிப்போம். * ௧. பேது. ௫, ௯. † மத். ௪, ௰௧.

௮ பராபரனண்டை சேருங்கோள், அப்போது அவர் உங்களண்டை சேருவார். பாவிகளே, * கைகளைச் சுத்தமாக்குங்கோள், இருமனக்காரரே, இருதயங்களைக் கற்பாக்குங்கோள். * ஏசா. ௧, ௰௬.

௯ * சிறுமையாகி, துயரப்பட்டழுங்கோள், உங்கள் நகைப்பு புலம்பலாகவும் உங்கள் சந்தோஷம் சஞ்சலமாகவும் மாறக்கடவது. * மத். ௫, ௪.

௰ * கர்த்தருக்கு முன்பாகத் தாழுங்கோள், அப்போது உங்களை உயர்த்துவார். * ௧. பேது. ௫, ௬.

¶ சகோதரனைக் குற்றமாய் நிறணியாமலும் இச்சீவனுக்காக வீம்புபண்ணாமலுமிருக்க எச்சரித்தது.

௰௧ சகோதரரே, * ஒருவர்க்கொருவர் விரோதமாய்ப் பேசாதேயுங்கோள் சகோதரனுக்கு விரோதமாய்ப் பேசி, தன் சகோதரனைக் குற்றமாய் நிறணிக்கிறவன் ஞாயப்பிரமாணத்துக்கு விரோதமாய்ப் பேசி, ஞாயப்பிரமாணத்தைக் குற்றமாய் நிறணிக்கிறான். ஞாயப்பிரமாணத்தைக் குற்றமாய் நிறணித்தாயேயானால், நீ ஞாயப்பிரமாணத்தின்படி செய்கிறவனாயிராமல் அதைக் குற்றமாய் நிறணிக்கிறவனாயிருக்கிறாய். * மத். ௭, ௧—௫.

௰௨ ஞாயப்பிரமாணத்தைக் கட்டளையிட்டவர் ஒரே ஒருவர். அவர் இரட்சிக்கவும் அழிக்கவும் வல்லவர், * மற்றொருத்தனைக் குற்றமாய் நிறணிக்கிற நீ ஆர். * ரோ. ௰௪, ௪.

௰௩ இப்போதும்:* நாங்கள் இன்றைக்கு அல்லது நாளைக்கு இன்னபட்டணத்துக்குப்போய், அங்கே ஒருவருஷந்தங்கி வியாபாரம்பண்ணி, ஆதாயம்பெறுவோமென்கிறவர்களே, ஓகோ, *வாக. ௨௭, ௧. லூக. ௰௨. ௰௬—௨௰.
௰௪ நாளையிராத்தினத்தின்செய்தியையறியீர்களே, ஏனெனில் உங்கள் சீவனென்ன, கொஞ்சநேரங்காணப்பட்டு பிறகு காணாமல்போகிற புகைதானே.
௰௫ அதற்குப்பதிலாக நீங்கள்:* ஆண்டவருக்குச் சித்தமாயிருந்து, நாங்கள் உயிரோடிருந்தால், இன்னதைச் செய்வோமென்று சொல்ல வேண்டியதுமே.
* அப்போ. ௰௮, ௨௧.
௰௬ இப்போதோவென்றால் உங்கள் வீம்புகளிலே பெருமைபாராட்டுகிறீர்கள், இப்படிக்கொத்த பெருமைபாராட்டல் எல்லாம் பொல்லாங்காயிருக்குது.
௰௭ இப்போதும் * ஒருத்தன் நன்மைசெய்ய அறிந்தவனாயிருந்தும், அதைச்செய்யாதேபோனால் அவனுக்குப் பாவமாயிருக்குது. * லூக. ௰௨, ௪௭.

# ௫. அதிகாரம்.

¶ இரக்கமற்ற ஐசுரியவான்களுக்குச் சொன்ன புத்தி.

இப்போதும் * ஓகோ, ஐசுரியமுள்ளவர்களே, உங்கள்மேல்வரும் நிர்ப்பாக்கியங்களின் நிமித்தியமாக அலறி அழுங்கோள். * லூக. ௬, ௨௪—௨௫.
௨ * உங்கள் ஐசுரியம் அழிந்து, உங்கள் வஸ்திரங்கள் பொட்டரித்துப்போச்சுது. * மத. ௬, ௰௯.
௩ உங்கள் பொன்னும் வெள்ளியும் பாசிபிடித்தது,* அதுகளுடைய பாசி உங்களுக்கு விரோதமாகச்சாட்சியாயிருந்து, உங்கள் மாம்சங்களை அக்கினிபோலத்தின்னும். கடைசிநாள்களிலே பொக்கிஷங்களைச்சேர்த்தீர்கள்.
* யோபு. ௰௩, ௮.
௪ இதோ உங்கள் வயல்களை அறுத்த வேலையாள்களுடைய கூலி உங்களால் அன்யாயம்பண்ணப்பட்டுக் கூப்பிடுகுது, அறுத்தவர்களின் கூக்குரல்கள் சேனைகளுடைய கர்த்தரின் செவிகளிலேபட்டுது.

ரு * நீஙகள பூமியினமேலசசெலவமுளளவெருகளுமா யிருநதீர்கள, கொழுதததுகளை அடிககுமநாளிலசெய கிறதுபோல உஙகள இருதயஙகளைப்போஷிததீர்கள.

* லூக. ௰௬, ௰௯.

சு நீதிமானை கோலைததளுககி, கொனறுபோடடீர்கள, அவன உஙகளோடெதிர்தது நிறகவிலலை.

¶ நீணடபொறுமையாயிருககவும வீண ஆணை யிடாதிருககவும எசசரிததது.

எ இபபோதும, சகோதரரே, கர்ததரின வருகைமடடு ம * நீணடபொறுமையாயிருஙகோள. இதோ பயிர்ககுடி பூமியின விலையேறபபெறற கனிககுககாததிருநது தான முன்மாரியையும பின்மாரியையும அடையுமடடும அத ககாக நீணடபொறுமையாயிருககிறான. * லூக. உக, ௰௯.

அ நீஙகளும நீணடபொறுமையாயிருநது உஙகள இரு தயஙகளைத திடபபடுததுஙகோள, எனனெனறால கர்ததரு டைய வருகை சமீபிததிருககுது.

கூ சகோதரரே, நீஙகள ஆககினைககுளளாயததீர்ககப படாதபடிககு ஒருததருககொருததர் விரோதமாயபபெரு மூசசுவிடாதிருஙகோள. இதோ நியாயாதிபதிகதவுககுமுன நிறகிறார.

௰ என சகோதரரே, கர்ததருடைய நாமததிலேபேசின தீர்ககதரிசிகளைததீஙகனுபவிககுதலுககுமநீணடபொறு மைககும மாதிரியாகவைததுககொளளுஙகோள.

௰க இதோ * சகிககிறவர்களைபபாககியவானகளெனகி றோம. நீஙகள † யோபுடைய பொறுமையைககேடடீர் கள, கர்ததருடைய முடிவையுங கணடீர்கள, எனனெனறால கர்ததர் மெதத உருககமும இரககமுமுளளவர்.

* மத. ரு, ௰—௰க. † யோபு. க, உக.

௰உ எலலாததையும பார்ககிலுமோவெனறால, என சகோதரரே, * வானததினபேரிலாகிலும பூமியினபேரி லாகிலும வேறொரு ஆணையைககொணடெனகிலுஞ சத தியமபணணாதேயுஙகோள. நீஙகள ஆககினைததீர்பபுககுள ளாய விழாதபடிககு உஙகளுககு ஆம எனகிறது ஆம எனறும அலலவெனகிறது அலலவெனறும இருககககட வது. * மத. ரு, ௩௪—௩௭.

¶ கஷ்டதசையசெபமபணணுகிறதுமபாவியை
தத்திருப்புகிறதும மகாபபலனுள்ள
தென்பது.

௰௩ உங்களில ஒருத்தன * துயரனுபவித்தால, செபம பண்ணக்கடவான, † ஒருத்தன மகிழ்ச்சியாயிருந்தால, சங்கீதங்களைப்பாடக்கடவான. * சஙகீ. ருய, ௰ரு.

† கொலோ. ௩, ௰௬.

௰௪ உங்களில ஒருத்தன வியாதியாயிருந்தால, அவன சபையின மூப்பரையழைப்பானாக, இவர்கள அவன மேல்செபமபண்ணி, கர்த்தருடைய நாமத்திலே * அவனை எண்ணெயாலப்பூசக்கடவார்கள. மாற்கு. ௬, ௰௩.

௰௫ அப்போது விசுவாசத்தினுடைய செபம பிணியாளியையிரட்சிக்குமப்படியாயக்கர்த்தர் அவனையெழுப்புவார் அவன பாவங்களைசசெய்திருந்தால, அவனுக்கு மன்னிக்கப்படும.

௰௬ நீங்கள குணமாகிறதற்கு, * ஒருவர்க்கொருவர் பாவங்களை அறிக்கையிட்டு ஒருவர்க்காக ஒருவர் செபம பண்ணுங்கோள. † நீதிமானுடைய கருத்துள்ளவேண்டுதல வெகுபெலனுள்ளது. * மத. ரு, உ௩—உ௬.

† சஙகீ. ௱௪௫, ௰௮—௰௯.

௰௭ எலியா நம்மோடொத்தபாடுகளுள்ள மனுஷனாயிருந்தும, மழைபெய்யாதபடிக்கு வேண்டிக்கொண்டு செபம பண்ணினான, அப்போது மூன்றுவருஷமும ஆறுமாதமும * பூமியின்மேல மழைபெய்யாதிருந்தது.

* ௧. இராசா. ௰௭, ௧.

௰௮ * மறுபடி செபமபண்ணினான, அப்போது வானம மழையைப்பெய்தது, பூமிதன கனியையும முளைப்பித்தது. * ௧. இராசா. ௰௮, ௪௧. ௪௫.

௰௯ சகோதரரே, உங்களில ஒருத்தன சத்தியத்துக்கு விலகி மோசம்போகக்கொள்ள, ஒருத்தன அவனைத்திருப்பினால,

௨௰ அவன பாவியை அவனுடைய வழியின மோசத்தைவிட்டு விலகித்திருப்புகிறவன ஒரு ஆத்துமத்தை மரணத்துக்குத்தப்புவித்து, பாவங்களின திரளைமூடுமென்று அறியக்கடவான.

# அப்போஸ்தலனாகிய பேதுருவினுடைய

பொதுவான

# முதலாம் நிருபம்.

## க. அதிகாரம்.

¶ இரட்சிப்பின் மேன்மையைக் காண்பித்து,
அதுக்குத் தக்க பரிசுத்த நடக்கையைக்
கேட்கிறது.

இயேசு கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய
பேதுரு. * பிதாவாகிய பராபரன் முன்னறிந்திருக்கு
தின்படி, ஆவியின் பரிசுத்தமாக்குதலினாலே கீழ்ப்படி
தலுக்கும் இயேசுகிறிஸ்துவினுடைய இரத்தந் தெளிக்
கப்படுதலுக்குந் தெரிந்துகொள்ளப்பட்டவர்களாகிய.

* ரோ. அ, உகூ.

உ பொந்தியாவிலுங் கலாத்தியாவிலுங் கப்பதோக்கியா
விலும் ஆசியாவிலும் பித்தினியாவிலும், * சிதறியிருக்கிற
பரதேசிகளுக்கெழுதுகிறதாவது: கிருபையுஞ் சமாதான
மும் உங்களுக்குப் பெருகக்கடவது. * யாக. க, க.

ங இயேசுகிறிஸ்து மரித்தோரிலிருந் தெழுந்திருந்த
தினாலே நம்மை, தம்முடைய மிகுந்த இரக்கத்தின்படி
யே,

ச அழிவுந் தீட்டும் * வத்தச்சமு மற்ற சுதந்தரத்தின் மே
லுள்ள நம்பிக்கைக்கு மறுபடியுஞ் ஜெனிப்பித்த பராபர
னும் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடை
ய பிதாவுமானவர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர். * ரு, ச.

ரு கடைசிககாலத்திலவெளிபபட ஆயததமான இரட்சி பபுககுபபராபரனுடைய பெலததினாலே விசுவாசததை ககொணடுகாககபபடுகிற உஙகளுககு அது பரமணடலங களில வைததிருககுது.

சு இயேசுகிறிஸதது வெளிபபடுமபோது உஙகளுககு ப புகழசசியுங கனமும மகிமையுமவர, உஙகள விசுவாச ததின உததமம நெருபபினாலபபுடமிடபபடுகிற அழியு ஙனபொனனிலும மகா விலையேறபபெறறதாயககணடுபி டிககபபடுவதறகு,

எ இபபோது * பலவித சோதனைகளில, தேவையானா ல, கொஞசககாலந துககமாயிருககிற நீஙகள அபபோது களிகூருவீர்கள. * உ. கொரி. சு, யஎ.

அ அவரைககாணாமலசசிநேகிககிறவர்களும, இபபோ து *தெரிசியாமல அவர்பேரிலவிசுவாசிககிறவர்களுமாகிய நீஙகள சொலலிமுடியாத மகிமையுளள சநதோஷமாயக களிகூர்நது, * யோவ. உய, உகூ.

கூ உஙகள விசுவாசததின முடிவாகிய ஆததுமஙகளின இரட்சிபபை யடைவீர்கள.

ய உஙகளமேலவநதகிருபையைககுறிததுததீர்ககதெரி சனஞசொனன தீர்ககதெரிசிகள இநத இரட்சிபபைககு றிதது மெததவுநதேடியாராயநது,

யக கிறிஸததுவுககுணடாகுமபாடுகளையும அதுகளின பிறகு வருமமகிமைகளையுஞ சாட்சியாய முனனறிவிதத வராகிய தஙகளிலுளள கிறிஸததுவினுடைய ஆவியானவர் எநதககாலததை அலலது எபபடிககொதத காலததைக குறிததுககாட்டினாரெனறு ஆராயநதார்கள.

யஉ தாஙகள இதுகளைததஙகளுககலல நமககுததான தஙகள ஊழியததினாலே அறிவிததார்களெனறு அவர்களு ககு வெளிபபடுததபபட்டது. * வானததிலிருநது அனுபபப பட்ட பரிசுதத ஆவியால உஙகளுககுசசுவிசேஷததைபபிர சஙகிததவர்களைககொணடு இதுகள இபபோது உஙகளுக கறிவிககபபட்டது. இதுகளுககுளததெயவதூதர் குனிந துபார்கக ஆசையாயிருககிறார்கள. * அபபோ. ஊ க—ச.

௰௩ ஆகையால் * நீங்கள் உங்கள் சிந்தையின் அரைகளைக் கட்டிக்கொண்டு † வெறியற்றவர்களாயிருந்து, இயேசுகிறிஸ்து வெளிப்படும்போது உங்களுக்குக் கொண்டுவரப்படுங் கிருபையின்மேல் பூரண நம்பிக்கையை வைத்து,

* லூக். ௧௨, ௩௫—௩௭. † லூக். ௨௧, ௩௪.

௰௪ கீழ்ப்படிகிற பிள்ளைகளைப்போலே, முன் உங்கள் அறியாமையில் நடந்த இச்சைகளுக்கொத்த ரூபந்தரித்துக்கொள்ளாதிருந்து,

௰௫ உங்களையழைத்த பரிசுத்தரின்சாயலாய் * நீங்களும் எல்லா நடக்கையிலும் பரிசுத்தராயிருங்கோள்.

* லூக். ௧, ௭௫.

௰௬ ஏனெனில்: * பரிசுத்தராயிருங்கோள், அதேனென்றால் நாம் பரிசுத்தராயிருக்கிறோமென்றெழுதியிருக்குது. * ௩. மோ. ௰௯, ௨.

௰௭ பாரபட்சமில்லாமல் அவனவன் கிரிகையின்படி நியாயந்தீர்க்கிறவரை நீங்கள் பிதாவாகத் தொழுதுகொண்டிருக்கக்கொள்ள நீங்களிங்கே தங்குமட்டும் * பயத்துடனே நடந்து, * பிலி. ௨, ௰௨.

௰௮ அழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினாலும் அல்லது பொன்னினாலுமல்ல.

௰௯ குற்றமும் மாசுமற்ற ஆட்டுக்குட்டியாகிய கிறிஸ்துவின் * விலையேறப்பெற்ற இரத்தத்தினாலே பிதாக்களுடைய பாரம்பரை நடக்கையின் மாயைக்கு நீங்கலாக்கி மீட்கப்பட்டீர்களென்கிறதை யறிந்திருங்கோள்.

* அப்போ. ௨௰, ௨௮. ௧. கொரி. ௬, ௨௰.

௨௰ அவர் * லோகத்தோற்றத்துக்கு முன்னதானே குறிக்கப்பட்டவராயிருந்தும், தம்முடைய மூலமாய்ப் பராபரன்பேரில் விசுவாசிக்கிற உங்களுக்காக இந்தக் கடையாந்த காலங்களில் வெளிப்பட்டார். * ௨. தீமோ. ௧, ௯—௰.

௨௰௧ உங்கள் விசுவாசமும் நம்பிக்கையும் பராபரன்மேலிருக்கும்படிக்கு அவரை அவர் மரித்தோரிலிருந்தெழுப்பி, அவருக்கு மகிமையைக் கொடுத்தார்.

௨௰௨ ஆகையால் நீங்கள் சத்தியத்துக்குக் கீழ்ப்படிகிறதினாலே உங்கள் ஆத்துமங்களை ஆவியைக்கொண்டு மாயமற்ற சகோதர சிநேகத்துக்கென்று சுத்தமாக்கி,

௨௩ அழிவுள்ள வித்தினாலல்ல, என்றென்றைக்கும் நிற்கிற சீவனுள்ள தேவவசனமென்னும் அழிவில்லாத வித்தினாலே * மறுபடியுஞ்செனிப்பித்தவர்களாய் ஒருத்தரையொருத்தர் சுத்த இருதயத்தாலக்கருத்தாய்ச்சினேகியுங்கோள்.

* யோவ. ௧, ௰௩. யாக. ௧, ௰௮.

௨௪ என்னத்தினாலே * மாம்சமெல்லாம் புல்லைப்போலேயும், மனுஷனுடைய மகிமையெல்லாம் புல்லின் பூவைப்போலேயுமிருக்குது. புல் உலர்ந்தது அதின் பூவுதிர்ந்தது. * சங்கீ. ௱௩, ௰௫—௰௭. ஏசா. ௪௰, ௬—௮.

௨௫ ஆனால் கர்த்தருடைய வசனம் என்றென்றைக்கும் நிற்கும், இதுவேயென்னில் உங்களுக்குச் சுவிசேஷமாய் அறிவிக்கப்பட்ட வசனந்தானே.

# ௨. அதிகாரம்.

¶ கிறிஸ்துவுக்குள் வளர்ந்துவரவும், அவரைச் சார்ந்து நடக்கையால் அடைகை யுண்டாம் என்பது.

ஆகையால் * கர்த்தர் தயவுள்ளவரென்கிறதை நீங்கள் ருசிபார்த்திருண்டானால், * சங்கீ. ௩௪, ௯.

௨ * எல்லாத் துர்க்குணத்தையும் எல்லாக் கபடத்தையும் மாயங்களையும் பொறாமைகளையும் எல்லாப் புறணிகளையும் அகற்றிப்போட்டு, * எபே. ௪, ௨௨.

௩ நீங்கள் * வசனத்தின் கபடமற்ற பாலினாலே வளரும்படிக்கு, † இப்போது பிறந்த குழந்தைகளைப்போல அதின்மேல் வாஞ்சையாயிருங்கோள்.

* சங்கீ. ௱௰௯, ௱௩. † மத. ௰௮, ௩.

௪ * மனுஷரால் ஆகாதென்று தள்ளுண்டு பராபரனிடத்திலோ தெரிந்துகொள்ளப்பட்டதும் விலையேறப்பெற்றதுமான சீவனுள்ள கல்லாகிய அவரிடமாகச்சேர்ந்து வருகிற நீங்களும், * சங்கீ. ௱௰௮, ௨௨.

௫ சீவனுள்ள கல்லுகளைப்போலே * ஞானமாளிகையாகவும், இயேசுகிறிஸ்துமூலமாய்ப் பராபரனுக்கு நற்பிரியமான † ஞானப்பலிகளைச்செலுத்தும் பரிசுத்த ஆசாரியக்கூட்டமாகவுங் கட்டப்படுங்கோள். * எபே. ௨, ௨௰—௨௨. † ரோ. ௰௨, ௧. எபி. ௰௩, ௰௫—௰௬.

௬ * இதோ தெரிந்துகொள்ளப்பட்டதும் விலையேறப்பெற்றதுமான கோடிக்கல்லைச் சீயோனிலே வைக்கிறேன், அதின்பேரில் விசுவாசிக்கிறவன் வெட்கப்பட்டுப்போவதில்லையென்கிறது அதற்காக வேத எழுத்திலே எழுதியிருக்குது. * ஏசா. ௨௮, ௰௬.

௭ ஆகையால் விசுவாசிக்கிற உங்களுக்கு அது விலையேறப்பெற்றது. அவிசுவாசிகளுக்கோவென்றால், வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின இந்தக்கல்லுக் கோடிக்குத் தலையும் * தடுக்கலின்கல்லும் இடறுதலின் கன்மலையுமாச்சுது. * ஏசா. ௮, ௰௪—௰௫. ரோக. ௨, ௩௩.

௮ அவர்கள் இணங்காதவர்களாயிருந்து வசனத்தில் இடறுகிறார்கள், அதற்கு வைக்கப்பட்டவர்களுமாயிருக்கிறார்கள்.

௯ நீங்களோவென்றால் உங்களை அந்தகாரத்தைவிட்டுத் தம்முடைய ஆச்சரியமான வெளிச்சத்துக்கு வரவழைத்தவருடைய புண்ணியங்களை அறிவிக்கும்படிக்குத் தெரிந்துகொள்ளப்பட்ட சந்ததியும், * இராசரீகமான ஆசாரியக்கூட்டமும் பரிசுத்த சாதியும் அவருக்குச் சொந்தமான சனமுமாயிருக்கிறீர்கள். * ௨. மோ. ௰௯, ௫—௬. அபி. ௧, ௬. ௫, ௰.

௰ * முற்காலத்திலே சனமல்லாத நீங்கள் இப்போது பராபரனுடைய சனம், இரக்கம்பெறாத நீங்கள் இப்போது இரக்கம்பெற்றவர்கள். * ஓசே. ௧, ௰. ௨, ௨௩.

௰௧ பிரியமானவர்களே, ஆத்துமத்துக்கு விரோதமாகப் போர்செய்யும் * மாம்ஷ இச்சைகளுக்கு நீங்கள் விலகியிருக்கவும். * ரோ. ௰௩, ௰௪. கலாத. ௫, ௰௬.

௰௨ * புறச்சாதியார் உங்களை எதிலே அக்கிரமக்காரரென்று பழிசொல்லுகிறார்களோ, அதிலே உங்கள் நற்கிரியைகளைக் கண்டு, கண்காணிப்பின் நாளிலே பராபரனை மகிமைப்படுத்தும்படிக்கு, நீங்கள் அவர்களுக்குள்ளே நல்நடக்கையாய் நடக்கவும், † அசதேசி பரதேசிகளாகிய உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

* மத. ௫, ௰௬. † எபி. ௰௧, ௰௩.

¶ துரைத்தனத்தாருக்கும் எஜமான்களுக்குங் கீழ்ப்படிந்து நடக்கப்புத்திசொன்னது.

௰௩ ஆகையால் * எல்லாமனுஷ அதிகாரக்கட்டளைக்குங் கர்த்தர் நிமித்தியமாகக் கீழ்ப்படியுங்கோள், மேன்மை அதிகாரமுள்ள இராசாவானாலுஞ்சரி,

* ரோ. ௰௩, ௧—எ. தீத்து. ௩, ௧.

௰௪ தின்மைசெய்கிறவர்களின் ஆக்கினைக்கும் நன்மை செய்கிறவர்களின் புகழ்ச்சிக்குமவனால் அனுப்பப்பட்டதலைவர்களானாலுஞ்சரி.

௰௫ ஏனென்னில் நீங்கள் * நன்மைசெய்கிறதினாலே மதியீனமனுஷருடைய அறியாமையை வாய்க்கட்டுவது பராபரனுடையசித்தமாயிருக்குது. * தீத்து. ௨, எ.

௰௬ * விடுதலையாயிருந்தும், விடுதலையைத் துற்குணத்துக்கு மூடலாகக்கொண்டிராமல், பராபரனுடைய அடிமைகளாயிருங்கோள். * யொவ. ௮, ௩௨.

௰எ எல்லாரையுங் கனம்பண்ணுங்கோள், சகோதரரைச் சிநேகியுங்கோள், பராபரனுக்குப்பயந்திருங்கோள், இராசாவைக் கனம்பண்ணுங்கோள்.

௰௮ * வேலைக்காரரே, எல்லாப்பயத்துடனே எஜமான்களுக்குக் கீழ்ப்படிந்திருங்கோள், நல்லவர்களுக்குஞ் சாந்தகுணமுள்ளவர்களுக்குமாத்திரமல்ல, மூடருக்குங்கூடத்தானே. * எபே. ௬, ரு—௮.

௰௯ ஏனென்றால் ஒருத்தன் பராபரன்பேரில் பத்தியானமனச்சாட்சியின் நிமித்தியம் * அக்கிரமங்களைச் சகித்து, அநியாயமாய்ப்பாடனுபவித்தால், அதுவே கிருபை.

* மத். ரு, ௰.

௨௰ ஏனென்னில் நீங்கள் பாவஞ்செய்து அறையப்பட்டுச் சகித்தால், அதெனன கீர்த்தி? நீங்கள் நன்மைசெய்து பாடுபட்டுச் சகித்தீர்களேயானால், அதுவே பராபரனிடத்திலே கிருபை.

௨௧ ஏனென்றால் * இதுக்கழைக்கப்பட்டீர்கள். ஏனென்னில் கிறிஸ்துவும் உங்களுக்காகப்பாடுபட்டு, நீங்கள் தம்முடைய காலடிகளைத்தொடர்ந்துவர, உங்களுக்குப்பிரமாணம் பின்வைத்தார். * ௧. தெச. ௩, ௩.

௨௨ * அவர் பாவஞ்செய்ததில்லை, அவர்வாயிலே வஞ்சனைகாணப்பட்டதுமில்லை. * ஏசா. ௫௩, ௯.

௨௩ * அவர் வையப்படுகிறபோது பதிலுக்கு வையாமலும், பாடுபடுகிறபோது மிரட்டாமலும், நீதியாய்த் தீர்க்கிறவருக்கு ஒப்புக்கொடுத்தார். * ஏசா. ௫௩, ௭.

௨௪ நாம் பாவங்களுக்குச் செத்து, நீதிக்குப் பிழைக்க, * நம்முடைய பாவங்களைத் தாமே தம்முடைய சரீரத்திலே சுமந்துகொண்டு மரத்திலேறினார். அவர் தழும்புகளால் சொஸ்தமானீர்கள். * ஏசா. ௫௩, ௪. ௧. யொவா. ௩, ௫.

௨௫ ஏனெனில் * சிதறுண்ட ஆடுகளைப்போலிருந்தீர்கள், ஆனால் இப்போது உங்கள் ஆத்துமங்களுடைய † மேய்ப்பருங் கண்காணியருமானவரண்டைக்குத் திரும்பப்பட்டீர்கள். * ஏசா. ௫௩, ௬. † யொவா. ௰, ௰௧.

## ௩. அதிகாரம்.

¶ பெண்சாதிகளுக்கும் புருஷர்களுக்குஞ் சொன்னபுத்தி.

அப்படியே, * பெண்சாதிகளே, சிலர் வசனத்தால் இணங்காதே போனாலும், பயத்தோடே கூடிய உங்கள் கற்பான நடக்கையைக் கண்ணோக்கி,
* எபே. ௫, ௨௨—௨௪.

௨ வசனமன்றியில இஸ்திரிகளின் நடக்கையால் ஆதாயப்படுத்திக்கொள்ளப்படுவதற்கு, உங்களுடைய புருஷருக்குக் கீழ்ப்படிந்திருங்கோள்.

௩ * புறம்பே மயிர்ப்பின்னலும் பொன் ஆபரணப் பூணுதலும் வஸ்திரமுடுக்குதலும் உங்கள் அலங்காரமாயிராமல், * ௧. திமோ. ௨, ௯—௰. ஏசா. ௩, ௰௬—௨௪.

௪ இருதயத்தின் அந்தரங்கமனுஷனை மெத்தனவான அமைந்த ஆவியென்கிற அழியாத அலங்காரத்தைத் தரித்திருக்கக்கடவது, அதுவே பராபரனுக்கு முன்பாக விலையேறப்பெற்றது.

௫ ஏனெனில் இப்படியே பூர்வத்திலே பராபரன்மேல் நம்பிக்கையான பரிசுத்தப் பெண்சாதிகளும், தங்களுடைய புருஷருக்குக் கீழ்ப்படிந்து, தங்களை அலங்கரித்தார்கள்.

௬ இப்படி * சாறாள் ஆபிரகாமை இசமானென்றழை

த்து அவனுக்குக் கீழ்ப்படிந்தாள்; நன்மைசெய்து ஒரு திகிலுக்கும் பயப்படாதிருந்தீர்களானால், அவளுக்கு நீங்கள் பிள்ளைகளானீர்கள். * ௧. மோ. ௰௮, ௰௨.

௭ அப்படியே * புருஷரே, உங்கள் ஜெபங்கள் தடைப்படாதபடிக்கு, புத்தியுடனே அவர்களோடே வாசமாயிருந்து, உங்களிலும் பெலவீனபாண்டமாகிய ஸ்திரிசாதிக்கு, அவர்களுஞ் ஜீவனுடைய கிருபைக்கு உடன்சுதந்தரரென்று, கனங்கொடுங்கோள். * எபே. ௫, ௨௫. ஷ:

¶ சிநேகமும் பொறுமையுமான சன்மார்க்கத்துக்காகச் சொன்ன புத்தி.

௮ கடைசி என்னவெனில், எல்லாரும் * ஒருமனப்பட்டவர்களும் பரிதவிக்கிறவர்களுஞ் சகோதர நேசரும் உருக்கவாளிகளும் பட்சமுள்ளவர்களுமாயிருங்கோள்.
* ரோ. ௰௨, ௰௫—௰௬.

௯ * பொல்லாப்புக்குப் பொல்லாப்பையும், அல்லது உதாசனத்துக்கு உதாசனத்தையுஞ் சரிக்கட்டாதேயுங்கோள். அதற்கெதிரிடையாக, நீங்கள் ஆசீர்வாதத்தைச் சுதந்தரித்துக்கொள்ள அழைக்கப்பட்டவர்களென்றறிந்து ஆசீர்வதியுங்கோள். * மத. ௫, ௪௪—௪௫.

௰ என்னெனில், * ஜீவனை விரும்பி நல் நாள்களைக் காணவேணுமென்றிருக்கிறவன் தன் நாவைப் பொல்லாப்புக்கும் தன் உதடுகளைக் கபடவசனிப்புக்கும் விலக்கி அமர்த்தி,
* சங். ௩௪, ௰௩—௰௭.

௰௧ பொல்லாப்பை விட்டுவிலகி நன்மை செய்யவும், சமாதானத்தைத் தேடி அதைப் பின்தொடரவுங்கடவன்.

௰௨ என்னெனில் கர்த்தருடைய கண்கள் நீதிமான்கள்மேல் வைக்கப்பட்டு, அவருடைய செவிகள் அவர்கள் வேண்டுதலுக்குக் கவனிக்குது, ஆனால் கர்த்தருடைய முகம் பொல்லாங்குசெய்கிறவர்களுக்கு விரோதமாயிருக்குது.

௰௩ நீங்கள் நன்மையைப் பின்பற்றுகிறவர்களானால், உங்களுக்குப் பொல்லாப்பைச் செய்பவனும் ஆர்.

௰௪ அல்லவென்று * நீதியின் நிமித்தியமாக நீங்கள் பாடனுபவித்தாலும் பாக்கியவான்களாயிருக்கிறீர்கள். † அவர்கள் பயமுறுத்தலுக்கோ நீங்கள் பயப்படாமலுங் கலங்காமலும், * மத. ௫, ௰. † எசா. ௪, ௮.

௰௫ * கர்த்தராகிய பராபரனை உங்கள் இருதயங்களிலே பரிசுத்தம்பண்ணி, உங்களிலிருக்கும் நம்பிக்கையைக்குறித்து உங்களை உத்தரவுகேட்கிறவனுக்கெல்லாம் மெத்தனவோடேயும் பயத்தோடேயுமான உத்தரவுசொல்ல எப்போதும் ஆயத்தமாயிருந்து, * எசா. ௮, ௰௩.

௰௬ * கிறிஸ்துவுக்குள்ளான உங்கள் நல்நடக்கையைத் தூஷிக்கிறவர்கள் உங்களைப் பொல்லாங்குசெய்கிறவர்களென்று புறணிசொல்லுகிறதிலே வெட்கப்படும்படிக்கு நல்மனச்சாட்சியுடையவர்களாயிருங்கோள். * ௨, ௰௨.

௰௭ அதேதென்றால் தின்மைசெய்கிறவர்களாய்ப் பாடனுபவிக்கிறதைப்பார்க்கிலும், பராபரனுக்குச் சித்தமானால் நன்மைசெய்கிறவர்களாய்ப் பாடனுபவிக்கிறதுதான் விசேஷம்.

௰௮ ஏனெனில் ஒருவிசை பாவங்களினிமித்தியமாய்க் கிறிஸ்துவாகிய நீதிபரரும் * அநீதியர்களுக்காகப் பாடுபட்டு, தாம் நம்மை பராபரனண்டைக்குச்சேர்க்கத்தக்கதாக, மாம்சத்திலே கொலையுண்டு, ஆவியாலே உயிர்ப்பிக்கப்பட்டார். * ரோ. ௫, ௬.

௰௯ அதிலே அவர்போய், * பூர்வத்திலே பராபரனுடைய நீடிய பொறுமை ஒருவிசை நோவாவின் நாட்களிலே பேழை ஆயத்தம்பண்ணப்படுகையிலே பொறுக்கும்போது விசுவாசியாமல்போன காவலிலுள்ள ஆவிகளுக்கும் † பிரசங்கித்தார். * க. மோ. ௬, ௩. ௸. † ௪, ௬.

௨௰ அந்தப்பேழையிலே கொஞ்சப்பேராகிய எட்டு ஆத்துமாக்கள் உட்பட்டு, தண்ணீராலே காப்பாற்றப்பட்டார்கள்.

௨௧ இதின் ஒப்பனையாகிய * ஞானஸ்நானம் மாம்சத்தின் அழுக்கை நீக்குதலாயிராமல், பராபரனோடே நல்மனச்சாட்சியின் உடன்படிக்கையாயிருந்து, இப்போது நம்மையும் இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலாலே இரட்சிக்கிறது. * மாற். ௰௬, ௰௬. ரோ. ௬, ௩—௪.

௨௨ அவர் பரமண்டலத்துக்குள்ப்போய், * பராபரனுடைய வலதுபாரிசத்திலேயிருக்கிறார், அவருக்குத் தேவதூதரும் அதிகாரங்களும் வல்லமைகளும் கீழ்ப்படிந்திருக்கிறது. * எபே. ௧, ௨௰—௨௨.

# ௪. அதிகாரம்.

¶ பாவததுககுசசெதது, சிநேகமுளள சன்
மார்ககமாயநடநது உபததிரவஙகளிலே
நற்சீராய நிலைநிறகபபுததி
சொனனது.

இபபோதுங கிறிஸதது நமககாக மாஙகிஷததிலபபா டுபடடபடியால, நீஙகளும * அநதசசிநதையையே ஆயுதமாக அணிநதுகொளளுஙகோள.

* எபி. ௰௨, ௧—௫.

௨ எனனில மாஙகிஷததிலபபாடுபடடவன இனிமா ஙகிஷததில மீதியாயிருககுங காலததில மனுஷரின இசசை களுககலல, பராபரனுடைய சிததததுககுபபிழைககும படிககு, பாவததைவிடடோய்ந்தான.

௩ எனனெனறால * சென்ற ஆயுசினகாலததிலே காமவி காரஙகளிலும இசசைகளிலும மதுபானவெறிகளிலும பெருநதீனியிலுங குடியிலும அடாதவிககி ர ஆராத னைகளிலுமநடநது, அஞஞானிகளின மனதுககேறறதை நடபபிததது நமககுபபோதும.

* எபே. ௪, ௰௭—௰௯.

௪ நீஙகள அநதக்கெடடமார்ககததின தாறுமாறுககுக கூட ஓடாமலிருககிறதைபபுதுமையெனறு பார்ததுத தூஷிககிறார்கள.

௫ அவர்கள உயிரோடிருககிறவர்களையும மரிததவர்க ளையும ஞாயநதீர்கக ஆயததமாயிருககிறவருககுககணக கொபபுவிபபார்கள.

௬ எனனில இதறகாக * மரிததோருககும, அவர்கள மாஙகிஷததிலோ மனுஷர்முனபாக ஞாயநதீர்ககபபடடு ஆவியிலோ பராபரனமுனபாகபபிழைபபதறகாக, சுவி சேஷம அறிவிககபபடடுது. * ௩, ௰௯.

௭ * ஆனால எல்லாககாரியஙகளின முடிவுஙகிடடிவநது து ஆகையால † சொஸததபபுததியாயிருநது செபஙகளுககு மனதெளிவாயிருஙகோள.

* ௧. யோவா. ௨, ௰௮. † லூக. ௨௧, ௩௬.

௮ எல்லாத்தையும் பார்க்கிலுமோவென்றால் ஒருத்தர்க்கொருத்தர் சருத்தான சினேகமுள்ளவர்களாயிருங்கோள் என்னில் சினேகம் * திரள் பாவங்களை மூடும்.

* யாக். ௰, ௨.

௯ நீங்கள் முறுமுறுப்பில்லாமல் ஒருத்தரையொருத்தர் * சேர்த்துக்கொண்டு, * எபி. ௰௩, ௨.

௰ * அவனவன் எப்படிவரம் பெற்றிருக்கிறானோ, அப்படியே பராபரனுடைய பலபல கிருபையின் நல் உக்கிராணக்காறரைப்போல் ஒருத்தர்க்கொருத்தர் அதினால் ஊழியஞ்செய்யுங்கோள். * ரோ. ௰௨, ௬.

௰௧ * ஒருத்தன் பேசினால் பராபரனுடைய வாக்கியங்களாய்ப் பேசக்கடவான், ஒருத்தன் ஊழியஞ்செய்தால், பராபரன் கொடுக்கிற பெலத்தால் செய்யக்கடவான், எல்லாத்திலும் பராபரன் ஜேசுக்கிறிஸ்து மூலமாய் மகிமைப்படும்பொருட்டாகத்தானே, அவருக்கு என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் மகிமையும் பெலனுமுண்டாயிருக்குது, ஆமென். * ரோ. ௰௨, ௭—௮.

௰௨ பிரியமானவர்களே, * சோதனையாக உங்களுக்குக் குறச்சுதனைவினாலே நீங்கள் ஒருபுதுமை உங்களுக்குச் சம்பவிக்கிறதுபோலே, திகையாமல்,

* ௧, ௬—௭. எசா. ௪௮, ௰.

௰௩ கிறிஸ்துவினுடைய பாடுகளுக்கெப்படி பங்குள்ளவர்களானீர்களோ, அப்படி அவருடைய மகிமையின் வெளிப்படுதலிலக்களிகூர்ந்து மகிழும்படிக்கும் * சந்தோஷமாயிருங்கோள். * யாக். ௧, ௨—௩.

௰௪ * நீங்கள் கிறிஸ்துவினுடைய நாமத்தினிமித்தியம் நிந்திக்கப்பட்டால், பாக்கியவான்கள், என்னில் மகிமையின் ஆவியும் பராபரனின் ஆவியுமானவர் உங்கள் மேலத்தங்கியிருக்கிறார், அவர்களிடத்திலோ தூஷணிக்கப்படுகிறார் உங்களிடத்திலோ மகிமைப்படுகிறார்.

* மத். ௫, ௰௧—௰௨.

௰௫ ஆனால் உங்களில் ஒருத்தனுங் கொலைபாதகனாய், அல்லது திருடனாய், அல்லது பொல்லாங்குசெய்தவனாய் அல்லது அன்னியகாரியங்களிலத்தலையிட்டுக்கொண்டவனாய்ப் பாடுபடவேண்டாம்.

யசு கிறிஸதவனுயபபாடுபடடானேயாகில வெடகா மலிருநது, பாாபானை இகாரியததிலே* மகிமைபபடுத தககடவான. *ஏசாவ. உக, யக.

யஎ ஏனெனில நியாயததீர்பபு * பாாபானுடைய வீட டிலே துவககுஙகாலமாயிருககுது மூநதி நமமிடததில துவககபபடடுதேயாகில பாாபானுடைய சுவிசேஷதது ககுககீழபபடியாதவர்களினமுடிவு † எனனமாயிருககும * எரே. உக, உக. † லூக. உங, நஉ.

யஅ * நீதிமான இாடசிககபபடுவது அரிதானுல, ஆகா தவனும பாவியும எஙகே நிறபான. * வாச. யக, நக.

யகூ ஆகையால பாாபானுடைய சிததததினபடி பாடு படுகிறவர்கள *உணமையுளள சிஷடிகாாகிய அவருககு த தஙகள ஆததுமஙகளை நனமைசெயகிறவர்களாய ஒபபுக கொடுககககடவார்கள. * சஙகீ. நக, ரு. லூக. உங, சரு.

## ரு. அதிகாரம்.

¶ மூபபருககும மறற அனைவருககும சொனன புததி.

உஙகளிலுளள மூபபரை உடனமூபபனும கிறிஸ துவினுடைய பாடுகளின சாடசியும வெளிபபட பபோகிற மகிமையின பஙகாளனுமாகியநான எசசரிககிற தாவது:

உ உஙகளிடததிலுளள * பாாபானுடைய மநதையை நீஙகள கடடாயததினுலலல, மனபபூருவததினுலேயும, † இலசசைபான ஆதாயபபிாியததினுலலல, உசசாகமன தினுலேயும, * அபபோ. உய, உஅ. † க. தீமோ. ந, ங.

ங * சுதநதரஙகளை ஆணடுகொளளுகிறவர்களாகவலல, மநதைககு † மாதிரிகளாகவுஙகணகாணிததுமேயுஙகோள * உ. கொாி. க, உச. † பிலிப. ங, யஎ.

ச அபபோது * பிரதானமேயபபர் வெளிபபடுகையி ல † மகிமையினுடையவாடாககிரீடததைபபெறுவீர்கள. * உ, உடு. † உ. தீமோ. ச, அ. அபி. உ, ய.

டு அபபடியே, இளைஞரே, மூபபருககுககீழபபடி யுஙகோள, *எலலாருமொவெருவரோ ஒருததர்ககொருததர் கீழபபடிநதுமனததாழமையையணிநது கொளளுங கோள, ஏனெனில † அகநதையுளளவர்களோடேபாாடடான

எதிர்த்து நின்று, தாழ்மையானவர்களுக்கோ கிருபையளிக்கிறார். * எபே. ௫, ௨௧. † மத். ௨௩, ௰௨.

௬ ஆனபடியினாலே பராபரன் ஏற்றகாலத்தில் உங்களை உயர்த்தும்படிக்கு, *அவருடைய வல்லமையான கைக்குக் கீழாகத் தாழ்ந்திருங்கோள். * யாக். ௪, ௰.

௭ * உங்கள் கவலையையெல்லாம் அவர்மேலே விட்டுப் போடுங்கோள், ஏனெனில் அவர் உங்களுக்காக விசாரிப்பாயிருக்கிறார். * பிலி. ௪, ௬—௭. எபிரே. ௰௩, ௫.

௮ * மனத்தெளிவாயிருங்கோள், முழித்திருங்கோள், ஏனெனில் உங்கள் சத்துருவாகிய பிசாசு கெர்ச்சிக்கிற சிங்கம் போலே, எவனை முழுங்கலாமோவென்று வகைதேடிச் சுற்றித்திரியுது. * ௧. தெச. ௫, ௬.

௯ * அதினோடே நீங்கள் விசுவாசத்தில் உறுதியாய் எதிர்த்து நின்று, லோகத்திலுள்ள உங்கள் சகோதரக்கூட்டத்தில் அப்படிக்கொத்த பாடுகளே நிறைவேறிவருகுதென்று அறியுங்கோள். * எபே. ௬, ௰—௰௬.

௰ ஆனால் *கொஞ்சக்காலம் பாடுபடுகிற நம்மைக் கிறிஸ்து இயேசுவுக்குள்ளாகத் தம்முடைய நித்திய மகிமைக்கழைத்த எல்லாக்கிருபையினுடைய பராபரன் உங்களைச் சீர்பொருந்தப்பண்ணி, உறுதியாக்கி, திடப்படுத்தி, அஸ்திவாரப்படுத்தக்கடவார். * ௧, ௭.

௰௧ அவருக்கு மகிமையும் பெலனும் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் உண்டாயிருக்கக்கடவது, ஆமென்.

௰௨ புத்தியாகவும் நீங்கள் ஊன்றி நிற்கிற கிருபை பராபரனுடையமெய்யான கிருபைதானென்று சாட்சியாகவும் நான் சுருக்கங்களுக்குச் சுருக்கமாய் உங்களுக்கெழுதி, என் எண்ணிக்கையின்படி உண்மையாயிருக்கிற சகோதரனாகிய சில்வானுவினாலே அனுப்பினேன்.

௰௩ பாபிலோனியாவிலே கூடத் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிற சபையும் என்குமாரனாகிய மாற்குவும் உங்களை வினவுகிறார்கள்.

௰௪ ஒருத்தரையொருத்தர் சினேகத்தின் முத்தத்தினாலே வினவிக்கொள்ளுங்கோள் கிறிஸ்து இயேசுவுக்குள்ளாகிய உங்கள் யாவருக்குஞ் சமாதானம், ஆமென்.

# அபபோஸததலனாகிய பேதுருவினுடைய

பொதுவான

# இரணடாம நிருபம

## க. அதிகாரம.

¶ புணணிய நடககைககெழுபபுகிற புததி.

நமமுடைய பராபரனும இரட்சகருமாகிய யேசுகிறி ஸதுவினுடைய நீதியால எஙகளோடேகூட ஏக அருமையான விசுவாசததைபபெறறவர்களுககு யேசுகிறிஸததுவினுடைய ஊழியககாறனும அபபோஸதலனுமாகிய சீமோன பேதுரு எழுதுகிறதாவது.

உ பராபரனையும நமமுடைய கறததராகிய யேசுவையும அறிகிற அறிவினாலே * கிருபையுஞசமாதானமும உஙகளுககுபபெருககககடவது. *க. பேது. க, உ.

ங மகிமையினாலும புணணியததினாலும நமமை அழைததவரை நாம அறிகிற அறிவினாலே அவருடையதெயவபெலனானது சீவனுககும தெயவபததிககும வேணடியதெலலாததையும * நமககுககொடுததபடியினாலும.

* க. பேது. உ, ங.

ச இசசையால லோகததிலுளள கேடடுககு நீஙகள தபபிததுககொணடவர்களேயானால தெயவீககுணததுககுபபஙகுளளவர்களாகததககதாகபபெரிய விலையேறபபெறறவாககுததததஙகள நமககதுகளால தயவுபணணபபடடபடியினாலும,

௫ நீங்கள் இதின்மேற்றானே * எல்லாச்சாக்கிரதையையும் வைத்து, உங்கள் விசுவாசத்திலப்புண்ணியத்தையும் புண்ணியத்திலே அறிவையும், * ஞாச. ௰௫, ௨௪.

௬ அறிவிலே இச்சையடக்கத்தையும், இச்சையடக்கத்திலே பொறுமையையும், பொறுமையிலே தேவபத்தியையும்.

௭ தேவபத்தியிலே சகோதரசிநேகத்தையும், * சகோதரசிநேகத்திலே பொதுப்பட்சத்தையுங் காண்பித்து வழங்குங்கோள். * ௧. தெச. ௩, ௰௨.

௮ என்னெனில் இதுகள் உங்களுக்குண்டாயிருந்து பெருகினால் உங்களை நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவை அறிகிற அறிவிலே வீணராக அல்லது * கனியற்றவர்களாக இருக்கவொட்டாது. * தீத்து. ௩, ௰௪.

௯ என்னென்றால் ஆருக்கிதுகள் இல்லாதேபோகுதோ, அவன் தன் முந்தின பாவங்களின் சுத்திகரிப்பை மறந்து கண்சொருகிப்போன குருடனாயிருக்கிறான்.

௰ ஆகையால் சகோதரரே, * உங்கள் அழைப்பையுந் தெரிந்துகொள்ளுதலையும் உறுதியாக்க அதிக சாக்கிரதையாயிருங்கோள், என்னெனில் இதுகளைச் செய்தீர்களானால் நீங்கள் ஒருக்காலும் இடறுவதில்லை. * எபி. ௬, ௰௪.

௰௧ என்னெனில் இப்படியே நம்முடைய கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய நித்திய இராச்சியத்துக்குள் பிரவேசிக்குதல் உங்களுக்குப் பரிபூரணமாய் அளிக்கப்படும்.

௰௨ ஆனபடியினாலே * நீங்கள் இதுகளையறிந்து, இப்போது உங்களுக்கிருக்கிற சத்தியத்தில் உறுதிப்பட்டிருந்தாலும், எப்போதும் உங்களுக்கிதுகளை நினைப்பூட்ட நான் அசதியாயிருப்பதில்லை.

* ரோ. ௰௫, ௰௪—௰௬.

௰௩ * நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும் எனக்குத் தெரிவித்தபடி நான் என் கூடாரத்தைப் போட்டுவிடுவது குறிவாயிருக்குதென்றறிந்து.

* யோவ. ௨௧, ௰௮—௰௯.

௰௩ இந்தக்கூடாரத்திலிருக்குமட்டும் உங்களை நினைப்பூட்டுகிறதினால் எழுப்ப நியாயமாக எண்ணுகிறேன்.

௰௫ ஆனால் நான் போனதற்குப்பிற்பாடும் இதுகளை எப்போதும் நினைவுகூர உங்களுக்குச் சக்தியுண்டாகப் பிரயெத்தனப்படுவேன்,

௰௬ ஏனெனில் சூட்சமான கட்டுக்கதைகளைப் பின்பற்றினவர்களாய் உங்களுக்கு நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய வல்லமையையும் வருகையையும் நாங்கள் அறிவியாமல்,

௰௭ * அவர் பிதாவாகிய பராபரனாலே கனமும் மகிமையும் பெற்று: இவர் நாம் பிரியமாயிருக்கிற நம்முடைய நேசகுமாரனாயிருக்கிறாரென்கிற சத்தம் அவருக்கு மகா மேன்மையான மகிமையிலிருந்துண்டாகிறபோது † அவருடைய மகத்துவத்தைக் கண்ணாரக் கண்டவர்களாய் அதை யுங்களுக்கறிவித்தோம். * மத். ௰௭, ௧—௫.
† யோவ. ௧, ௰௪.

௰௮ இந்தச்சத்தத்தை நாங்கள் அவரோடேகூடப் பரிசுத்த பர்வதத்திலிருக்கையில் வானத்திலிருந்து வரக்கேட்டோம்.

௰௯ மகா திட்டமான தீர்க்கதெரிசனவசனமும் நமக்குண்டே, பொழுதுவிடிந்து உங்களிருதயங்களில் வெள்ளி உதிக்குமட்டும் நீங்கள் இருளான தலத்திலே பிரகாசிக்கிற * வெளிச்சமாகிய அதைக் கவனித்திருக்கிறது நற்செய்கையாயிருக்கும். * சங். ௱௰௯, ௱௫.
௨. கொரி. ௪, ௩—௪.

௨௰ வேத எழுத்திலுள்ள ஒரு தீர்க்கதெரிசனமுஞ் சுயதோற்றலான வியார்த்தியாயிராதென்கிறதை முதல் முதல் அறியுங்கோள்.

௨௧ ஏனெனில் தீர்க்கதெரிசனம் பூருவத்திலே மனுஷன் சித்தத்தினாலே வராமல் பராபரனுடைய பரிசுத்த மனுஷர் * பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்டுப் பேசினார்கள்.
* ௨. தீமோ. ௩, ௰௬—௰௭.

# ௨. அதிகாரம்.

¶ களளபபோதகர் உணடாககுஙகேடடையும
அடையும ஆககினையையுங்காணபிததது.

ஆனால* களளததீர்ககதெரிசிகளுஞசனததுககுளளே யிருநதார்கள, அபபடி உஙகளுககுளளுங † கேடான வேதபபுரடடுகளை நுழையபபணணி, தஙகளைக கொணட ஆணடவரைமறுதலிதது, தஙகளமேலததீவிரமான அழிவைவருததிவிததுககொளளுகிற களளபபோதகர் இருபபார்கள. * எரே. ௨௩, ௨௧. எசேகி. ௰௩, ௩. ௸. † அபபோ. ௨௰, ௨௯.

௨ அவர்களுடையகேடுகளை அநேகர்பினசெலலுவார் கள, அவர்களாலசசததியவழி தூஷிககபபடும.

௩ கடடுவார்ததைகளால உஙகளிலபொருளாசையாய வியாபாரமபணணுவார்கள? அவர்களுககுபபூருவகாலந துவககிவைதத ஆககினை அசநதிராமலும அவர்கள அழிவு உறஙகாமலுமிருககுது.

௪ எனெனறால * பாவஞசெயதது தூதரைபபராபரன தபபவிடாமல, நரகததுககெனறுதளளி, ஞாயததீர்பபுக குவைககபபடடவர்களாக இருளின சஙகிலிகளுககொபபு க்கொடுதது. * யோவ. ௮, ௪௪. யூதா. ௬. ௭. வச.

௫ * பழய லோகததையுந தபபவிடாமல, நீதியினுடைய எடடாமபிரசஙகியாகிய நோவாவைககாபபாறறி, பததியறறவர்களுடையலோகததினமேலசலபபிரளயத தைவரபபணணி, * ௧. மோ. ௭, ௨௧—௨௪.

௬ * சோதோமகொமோறாவெனறபடடணஙகளையுஞ சாமபலாககி, கீழது மேலதாககிபபோடுகிறதினாலே ஆககினைககுளளாககிததீர்தது, ஆகாமியமாய நடககபபோகிறவர்களுககடையாளமாகவைதது.
* ௧. மோ. ௰௯, ௨௪—௨௫.

௭ அககிரமககாரருடைய காமவிகார நடககையாலவருததபபடட நீதிமானாகிய லோததை இரடசிததுவிடடாரே.

௮ என்னில் அந்த நீதிமான் அவர்களுக்குள்ளே குடியிருந்து, நாளுக்குநாள் அக்கிரமக்கிரியைகளைக் கண்டுங் கேட்டிருந்ததினாலே தன் நீதியுள்ள ஆத்துமத்தை * வாதித்தான்.

* சங். ௱௰௯, ௱௩௬.

௯ கர்த்தர் தேவபக்தியுள்ளவர்களைச் * சோதனைக்கு நீங்கலாக்கிவிடவும், அநீதக்காரரையோ நியாயத்தீர்க்கும் நாளுக்கு ஆக்கினைக்குள்ளானவர்களாக வைக்கவும் அறிவார்.

* ௧. கொரி. ௰, ௰௩.

௰ * விசேஷமாக அசுத்தத்தினுடைய இச்சையாய் மாம்ஸத்தின்பின்னே போய்க், கர்த்தத்துவத்தை அசட்டைபண்ணுகிறவர்களைத்தானே. அவர்கள் துணிகரக்காரர், அகங்காரிகள், அதிகாரங்களைத் தூஷிக்க நடுங்காதவர்கள்.

* யூத. ௰—௰௬.

௰௧ பலத்திலும் வல்லமையிலும் அதிகமான தேவதூதர் முதலாய் அதுகளுக்கு விரோதமாகக் கர்த்தருக்கு முன்பாகத் தூஷணமான நியாயத்தீர்ப்பை யிடார்களே.

௰௨ இவர்களோ * பிடிபட்டழிக்கப்படுவதற்குச் செனித்த புத்தியற்ற மிருகஜீவன்களைப்போலத், தாங்கள் அறியாததுகளிலே தூஷணஞ்சொல்லித், தங்கள் கேட்டிலே கெட்டழிந்து, அநீதத்தின் பலனையடைவார்கள்.

* எரே. ௰௨, ௩.

௰௩ அவர்கள் அநுதினச்செருக்கைச் செல்வமென்றெண்ணி, கறைகளும் இலச்சைகளுமாயிருந்து, தங்கள் வஞ்சகங்களில் செருக்காய் வாழ்ந்து, உங்களோடே விருந்துண்டு.

௰௪ விபசாரத்தால் நிறைந்த கண்களும் பாவத்தைவிட்டோயாத கண்களுமான கண்களுள்ளவர்களாயிருந்து, உறுதியற்ற ஆத்துமங்களை ஆசைப்பதங்காட்டியெத்தி, பொருளாசைகளுக்குப் பழகின இருதயத்தையுடைத்தான சாபத்தின் பிள்ளைகள்.

௰௫ அவர்கள் செம்மையான வழியை விட்டுத் தப்பிப்போய், * பேயோர் குமாரனாகிய பிலேயாமின் வழியைப் பின்சென்றுபோகிறார்கள், அவன் அநியாயத்தின் கூலியை விரும்பினான். * ௪. மோ. ௨௨, ௫. யூ அறி. ௨, ௰௪.

௰௬ ஆனால அவனுடையமீறுதலுக்கான கடிநதுகொளளுதல அவனுக்குணடாச்சுது. பேசசாறு மிருகவாகனம மனுஷசததமாயபபேசி, தீர்ககதரிசியினமதிகேடடைத தடுததுது.

௰௭ இவர்கள தணணீரிலலாத கிணறுகளுஞசுழலகாறறால அடியுணட மேகஙகளுமாயிருக்கிறாகள, இருளினுடைய அநதகாரம எனறெனறைக்கும அவர்களுக்குவைத திருக்குது.

௰௮ ஏனெனில மோசமாய நடக்கிறவர்களுக்கு மெய யாயததபபினவர்களை அவர்கள மாயமையினுடையமகாமே டடிமையான வார்ததைகளைபபேசி, மாமிஷ இசசைக ளினாலுஙகாமவிகாரஙகளினாலும ஆசைசபதஙகாடடி யெததி.

௰௯ தாஙகளே கேடடுககடிமைகளாயிருநதும அவர்க ளுககுவிடுதலையைவாககுததததமபணணுகிறார்கள. ஏனெ னில * எதினால ஒருததன ஜெயஙகொளளபபடடானோ அதுககவன அடிமையானான. * யோவ. ௮, ௩௪.

௨௰ அதேதெனறால * அவர்கள கரததருமஇரடசக ருமாகிய இயேசுகிறிஸததுவை யறிகிற அறிவினால லோக ததின அசுததஙகளுககுததபபினபிறபாடு அதுகளிலமறு படியுஞசிககுபபடடுசதோறறால, அவர்களுக்கு முறகாரி யஙகளைபபார்ககபபிறகாரியஙகள கேடாசசுது.

* மத. ௰௨, ௪௫. எபி. ௰, ௨௬—௨௭.

௨௧ ஏனெனில அவர்கள நீதியினவழியை * அறிநதபிற பாடு, தஙகளுககொபபுவிககபபடட பரிசுததகறபனைக ளைவிடடுததிருமபுகிறதைபபார்கக அதையறியாதிருநதார் களானால அவர்களுக்குததாவலையாயிருககும.

* லூக. ௰௨, ௪௭.

௨௨ ஆனால * நாய தான கக்கினதைததினகவும, குளி பபாடடபபடட பனறி சேறறிலபபுரளவுந திருமபிற தெனகிற மெயயான பழமொழியினபடி அவர்களுக்குச சமபவிததது. * வாககி. ௨௬, ௰௧.

# ௩. அதிகாரம்.

¶ வேதசக்கந்தக்காரரைக்குறித்து எச்சரித்ததும் ஞாயத்தீர்ப்பின் நிச்சயத்தையும் பயங்கரத்தையுங் காண்பித்ததும்.

பிரியமானவர்களே இந்த இரண்டாம் நிருபத்தை இப்போது உங்களுக்கெழுதுகிறேன்.

௨ பரிசுத்த தீர்க்கதரிசிகளால் முன்சொல்லப்பட்ட வார்த்தைகளையும் இரட்சகரானவரின் அப்போஸ்தலராகிய எங்களுடைய கற்பனையையும் நீங்கள் நினைக்க, இதுகளில் உங்கள் அப்புரவான சிந்தையை *நினைப்பூட்டியெழுப்புகிறேன். * ௧, ௰௩—௰௫.

௩ *கடைசிநாட்களிலே தங்கள் சுய இச்சைகளின்படி நடந்து. * ௨. திமொ. ௩, ௧.

௪ அவர்வருகையின் வாக்குத்தத்தம் எங்கேயிருக்குது; பிதாக்கள் நித்திரையடைந்தபிறகும் எல்லாஞ் சிஷ்டியின் தோற்றமுதல் இருந்தபிரகாரமாக இருக்குமேயென்று சொல்லுகிற சக்கந்தக்காரர் வருவார்களென்கிறதை முதலமுதல் அறிந்திருங்கோள்.

௫ ஏனென்றால் பூருவகாலத்திலே *பராபரனுடைய வார்த்தையினாலே வானங்களும் ஜலத்தினின்றுஞ் ஜலத்தினாலேயும் நிலைகொண்டபூமியும் இருந்ததென்கிறதையும்.

* சங். ௩௩, ௬.

௬ *அதுகளாலே அப்போதிருந்தலோகம் வெள்ளங்கொண்டு அழிந்ததென்கிறதையும் அவர்கள் மனதார அறியாமல்போகிறார்கள். * ௧. மோ. ௭, ௰௧—௨௰.

௭ *இப்போதிருக்கிற வானங்களும் பூமியுமோவென்றால் அந்தவார்த்தையாலேதானே வைத்துவைக்கப்பட்டு, பக்தியீனமனுஷர் ஞாயந்தீர்க்கப்பட்டுக் கெடும் நாளுக்கு அக்கினிக்கிரையாகக் காக்கப்படுகுது.

* ௨. தெச. ௧, ௬—௭.

௮ ஆனால பிரியமானவர்களே * கர்த்தரிடத்தில ஒரு நாள ஆயிரம வருஷங்களைப்போலவும ஆயிரம வருஷங்கள ஒருநாளைப்போலவும இருக்குதென்கிற ஒரேகாரியத்தை நீங்கள அறியாதிருக்கவேண்டாம. * சங்கீ. ௯௰, ௪.

௯ * சிலர தாமதமென்றெண்ணுகிறதுபோல கர்த்தர பண்ணின வாக்குத்தத்தத்துக்குத்தாமதிக்கமாட்டார, † நம்முடையமேல நீடியபொறுமையாயிருந்து, யாதொருத்தர கெட்டுப்போகவல்ல எல்லாருங்குணப்படுதலுக்கு வரசித்தமாயிருக்கிறார. * ஆபகூ. ௨, ௩. † எசே. ௩௩, ௰௧. ரோ. ௨, ௪. ௧. தீமோ. ௨, ௪.

௰ ஆனால * கர்த்தருடையநாள இராவில திருடனவருகிறவண்ணமாயவரும, † அதிலே வானங்கள மடமடப்பொடொழிந்து, பூதியங்களோ எரிந்துகரைந்து, பூமியும அதிலுள்ளகிரியைகளும வெந்துபோம.
* ௧. தெச. ௫, ௨—௩. † லூக. ௨௧, ௩௩.

௰௧ இப்போதும இதுகளெல்லாங்கரைந்துபோகிறதாயிருக்கக்கொள்ள நீங்கள வானங்கள வெந்துகரைந்து, பூதியங்கள எரிந்துருகிப்போகிறபராபரனுடைய நாளின வருகைக்குக்காத்திருக்கவுந்தீவிரிக்கவும,

௰௨ பரிசுத்த நடக்கைகளிலுந்தெய்வபத்தியிலும எப்படிப்பட்டவர்களாயிருக்கவேண்டியது.

௰௩ * ஆனால அவருடைய வாக்குத்தத்தத்தின்படியே, நீதிவாசமாயிருக்கிறபுதுவானங்களுக்கும புதுப்பூமிக்குங் காத்திருக்கிறோம. * ஏசா. ௬௫, ௰௭. அறி. ௨௧, ௧.

௰௪ ஆகையினாலே பிரியமானவர்களே இதுகளுக்குக் காத்திருக்கிற நீங்கள அவரால கறையுங்குற்றமுமற்றவர்களாயசமாதானத்தில கண்டுபிடிக்கப்படச்சாக்கிறதையாயிருந்து,

௰௫ நமமுடைய கர்த்தருடைய நீடியபொறுமையையே இரட்சிப்பாக எண்ணுங்கோள, இப்படி எங்களபிரிய சகோதரனாகிய பவுலுந தனக்குக்கொடுக்கப்பட்டஞானத்தினபடியே உங்களுக்கெழுதியிருக்கிறான.

௰௬ எலலா நிருபஙகளிலும இதுகளைககுறிததுபபேசும போது அபபடியெழுதினன * அதுகளில உணர அரிதாகிய சிலதுகளுணடு, அதுகளைககலலாதவர்களும உறுதியறறவர்களும மறறவேத எழுததுககளையுநதாஙகள புரடடுகிறபபோலேதஙகளுககுததானே கேடாகபபுரடடுகிறார்கள.

* ௨. கொரி. ௭, ௩-௪.

௰௭ நீஙகளோவெனறால பிரியமானவர்களே அககிரமககாரரின மோசததிலேககூடடிழுபபுணடு உஙகள உறுதியைவிடடு விழுநதுபோகாதபடிககு, இதுகளைமுன அறிநது உஙகளைககாததுக,

௰௮ நமமுடையகாததருமிரடசகருமாகிய இயேசுககிறிஸதுவினுடைய கிருபையிலும அவரையறிகிற அறிவிலுமவளருஙகோள அவருககிபபோதும எனறெனறைககும மகிமையுணடாவதாக, ஆமேன.

# அபபோஸ்தலனாகிய யோவானுடைய

பொதுவான

# முதலாம நிருபம.

## க. அதிகாரம.

¶ வெளிபபடட தெயவருமாரனாலே பாவிகள
பராபரனோடே ஐககமாகுமவகை.

ஆதி * முதலாயிருநதும நாஙகளகேடடதும எங
களகணகளினாலே † கணடதும நாஙகளநோககிப
பார்த்ததும எஙகளகைகள ‡ தொடடதுமான சீவனுடைய
வார்த்தையினசெயதியை யுஙகளுககறிவிககிறோம.

* யோவ. க, க—உ. † யோவ. க, யச.
‡ லூக. உச, ஙகூ.

உ எனனில * சீவனவெளிபபடடது, பிதாவினிடததி
லிருநதும நமககு வெளிபபடடதுமான நிததிய
சீவனை நாஙகளகணடிருநது அதறகுச சாடசிகொடுதது
அதை யுஙகளுககறிவிககிறோம. * யோவ. க, ச.

ங நாஙகள கணடதையுஙகேடடதையும உஙகளுககும
எஙகளோடே ஐககியமுணடாயிருபபதறகு, உஙகளுககறிவி
ககிறோம, ஆனாலும * நமமுடைய ஐககியம பிதாவோடும அ
வர்குமாரனாகிய இயேசுகிறிஸதுவோடும இருககிறது.

* யோவ. யஎ, உய—உங.

ச உஙகள சநதோஷம நிறைநததாயிருககுமபடிககு
இதுகளை உஙகளுககெழுதுகிறோம.

௫ * பரபரன் வெளிச்சமாயிருக்கிறார், அவரில் இருள் ஒன்றுமில்லை என்கிற ஞாயமே அவராலே கேட்டிருந்து உங்களுக்கறிவிக்கிற வாக்குத்தத்தம். * சங்கீ. ௱௪, ௨.
௬ அவரோடே நமக்கு ஐக்கியமுண்டென்று நாஞ்சொல்லியும் இருளிலே நடந்தால் நாம் உண்மையைச் செய்யாமல் பொய்சொல்லுகிறோம்.
௭ அவர் வெளிச்சத்திலிருக்கிறதுபோல நாமும் வெளிச்சத்திலே நடந்தோமேயானால் நமக்கன்னியோன்னிய ஐக்கியமுண்டாயிருந்து, * அவர் குமாரனாகிய இயேசுகிறிஸ்துவினுடைய இரத்தம் நம்மையெல்லாப் பாவமும் நீங்கச் சுத்திகரிக்குது. * எபி. ௯, ௰௪. அறி. ௧, ௫.
௮ நமக்குப் பாவமில்லை என்றோமானால் உண்மை நம்மக்குள்ளிராமல், நம்மை நாமே மோசம்போக்கிறோம்.
௯ * நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், அவர் நமக்குப் பாவங்களை மன்னித்து, நம்மை எல்லா அநிஞாயமும் நீங்கச் சுத்திகரிப்பதற்கு உண்மையும் நீதியுமுள்ளவராயிருக்கிறார். * சங்கீ. ௩௨, ௫.
௰ நாம் பாவஞ்செய்யவில்லையென்றோமானால் அவருடைய வார்த்தை நமக்குள்ளிராமல் அவரைப் பொய்யராக்கிறோம்.

# ௨. அதிகாரம்.

¶ பாவத்தையும் லோகசிநேகத்தையுங் கிறிஸ்துவின் எதிராளியையுங் குறித்து எச்சரித்தது.

என்பிள்ளைகளே நீங்கள் பாவஞ்செய்யாதபடிக்கு இதுகளை யுங்களுக்கெழுதுகிறேன், ஒருத்தன் பாவஞ்செய்தானேயாகில் நீதிபரராயிருக்கிற இயேசுகிறிஸ்து வென்கிற * காரியகர்த்தர் நமக்குப் பிதாவினிடத்திலிருக்கிறார். * றோ. ௮, ௩௪. எபி. ௯, ௨௪.
௨ அவர் * நம்முடைய பாவங்களை நிவிர்த்தியங்கிறவை யுண்டாக்குதலாயிருக்கிறார், ஆனால் நம்முடைய பாவங்களை நிவிர்த்தியமாத்திரமல்ல † சர்வலோகத்தின் பாவங்களை நிவிர்த்தியுமானதானே. * ௨. கொரி. ௫, ௨௧.
† யோவ. ௧, ௨௯. ௩, ௰௬.

௩ நாம் அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டோமாகில், அவரையறிந்திருக்கிறோமென்பதை அதினாலறிவோம்.

௪ அவரையறிந்திருக்கிறேனென்று சொல்லியும் அவர் கற்பனைகளைக் கைக்கொள்ளாதவன் உண்மையில்லாத பொய்யனாயிருக்கிறான்.

௫ ஆனால் எவன் *அவருடைய வசனத்தைக் கைக்கொள்ளுகிறானோ அவனில் பராபரனுடைய சிநேகம் மெய்யாகத் நிறைவேறிற்று, அவருக்குள்ளிருக்கிறோமென்பதை இதினாலறிவோம். * யோவ. ௰௪, ௨௧.

௬ * அவருக்குள் நிலைத்திருக்கிறேனென்று சொல்லுகிறவன் அவர் நடந்தபடியே தானும் நடக்கவேண்டியது.
* யோவ. ௰௫, ௰.

௭ சகோதரரே புதுக்கற்பனையையல்ல, நீங்கள் ஆதிமுதலாய்ப் பெற்றிருக்கிற பழய கற்பனையை உங்களுக்கெழுதுகிறேன், அந்தப் பழய கற்பனை நீங்கள் ஆதிமுதல்கொண்டு கேட்ட வசனந்தானே.

௮ மறுபடியும் புதுக்கற்பனையை உங்களுக்கெழுதுகிறேன், அதாவது: அவரிலிருக்கிற உண்மை உங்களிலுமிருக்கக்கடவது, ஏனெனில் * இருள் நீங்கிப்போய், மெய்யான வெளிச்சம் இப்போ பிரகாசிக்குது.
* ரோ. ௰௩, ௰௨.

௯ தான் வெளிச்சத்திலிருக்கிறேனென்று சொல்லியுந் தன் சகோதரனைப் பகைக்கிறவன் இதுவரைக்கும் இருளிலேயிருக்கிறான்.

௰ தன் சகோதரனைச் சிநேகிக்கிறவன் வெளிச்சத்திலே நிலைகொள்ளுகிறான், அவனிடத்தில் இடறலில்லை.

௰௧ தன் சகோதரனைப் பகைக்கிறவனோ இருளிலேயிருந்து இருளிலே நடந்து தான் எங்கே போகிறானென்கிறதையறியாதிருக்கிறான், ஏனெனில் இருள் அவன் கண்களைக் குருடாக்கிறது.

௰௨ பிள்ளைகளே, * பாவங்கள் உங்களுக்கு அவருடைய நாமத்தினிமித்தியம் மன்னிக்கப்பட்டுதென்று உங்களுக்கெழுதுகிறேன். * லூக. ௨௪, ௪௬—௪௭.

௰௩ பிதாக்களே, ஆதிமுதலாயிருக்கிறவரையறிந்திருக்கிறீர்களென்று உங்களுக்கெழுதுகிறேன், வாலிபரே,

பொல்லாங்கனை வென்றீர்களென்று உங்களுக்கெழுதுகி
றேன். பிள்ளைகளே, பிதாவையறிந்திருக்கிறீர்களென்று
உங்களுக்கெழுதுகிறேன்.

௰௪ பிதாக்களே, ஆதிமுதலாயிருக்கிறவரையறிந்திருக்
கிறீர்களென்று உங்களுக்கெழுதினேன், வாலிபரே, பெ
லவான்களாயிருக்கிறீர்களென்றும், தெய்வவசனம் உங்க
ளில்தரித்திருக்குதென்றும், பொல்லாங்கனைவென்றீர்க
ளென்றும் உங்களுக்கெழுதினேன்.

௰௫ லோகத்தையாகிலும் லோகத்திலுள்ளதுகளையாகி
லுஞ்சினேகியாதேயுங்கோள், * ஒருத்தன் லோகத்தைச்
சினேகித்தால், அவனில்பிதாவின்சினேகமில்லை.

* யாக. ௪, ௪.

௰௬ என்னில் மாம்சத்தினுடைய இச்சையுங்கண்
களுடைய இச்சையுஞ்சீவனத்தினுடைய பெருமையுமெ
ன்ற லோகத்திலுள்ளதெல்லாம் பிதாவினாலுண்டாயிராமல்
லோகத்தினாலுண்டாயிருக்குது.

௰௭ * லோகமும் அதின் இச்சையும் ஒழிந்துபோகும்,
பராபரனுடையசித்தத்தின்படிசெய்கிறவனோ என்றென்
றைக்கும் நிலைநிற்கிறான். * ௧. கொரி. ௭, ௩௧.

௰௮ பிள்ளைகளே, கடைசிநேரமாயிருக்குது, * கிறிஸ்
த்துவின் எதிராளிவருகிறதை நீங்கள்கேட்டிருக்கிறபடி
இப்போதுங்கிறிஸ்த்துவின் எதிராளிகள் அனேகருண்டா
னார்கள், அதினாலே கடைசிநேரமாயிருக்குதென்றறிகி
றோம். * மத். ௨௪, ௨௪. ௨. தெச. ௨, ௩—௪.

௰௯ * நம்மிடத்திலிருந்து புறப்பட்டார்கள், ஆனால்
அவர்கள் நம்முடையவர்களாயிருந்ததில்லை, என்னாலே
நம்முடையவர்களாயிருந்தார்களாகில், நம்முடனேதரித்
திருப்பார்களாம். ஆனால் எல்லாரும் நம்முடையவர்க
ளல்லவென்று வெளியாகும்படிக்குப்புறப்பட்டார்கள்.

* அப்போ. ௨௰, ௩௰.

௨௰ * நீங்களோவென்னில் பரிசுத்தராலே அபிஷேகத்
தைப்பெற்று, எல்லாத்தையும் அறிந்திருக்கிறீர்கள்.

* யோவ. ௰௪, ௨௬. ௰௬, ௰௩.

௨௧ நீஙகளசததியததை அறியாததினாலலல, நீஙகள அதையுஞசததியததால ஒருபொயயும உணடாயிராதெனகிறதையும அறிநதிருககிறபடியினாலே உஙகளுககெழுதினேன.

௨௨ இயேசுவெனகிறவர் கிறிஸதுவலலவெனறு மறுதலிககிறவனேயொழிய பினனையார்பொயயன, பிதாவையுஙகுமாரனையும மறுதலிககிற இவனேகிறிஸதுவுககெதிராளி.

௨௩ குமாரனை மறுதலிககிறவனுககெலலாம பிதாவுமிலலை.

௨௪ ஆகையால ஆதிமுதலாய நீஙகளகேடடது உஙகளில நிலைததிருககககடவது. ஆதிமுதலாய நீஙகளகேடடது உஙகளில நிலைததிருநதால, நீஙகளுஙகுமாரனிலும பிதாவிலும நிலைததிருபபீர்கள.

௨௫ * நிததியசீவனே அவர்நமககுககொடுதத வாககுத்தததம. * யொவ. ௫, ௫௬.

௨௬ உஙகளை மோசமபோககிறவர்களைககுறிதது இதுகளையுஙகளுககெழுதினேன.

௨௭ நீஙகள அவராலபெறற அபிஷேகமும உஙகளில நிலைகொணடிருககுது, * உஙகளை ஒருததனபோதிவிகக உஙகளுககுததேவையாயிராமல, அநத அபிஷேகமே சகல காரியஙகளையுஙகுறிதது எபபடி உஙகளைபபோதிவிககுதோ, அபபடியே பொயயறறசததியமாயிருககுது அது உஙகளைபபோதிவிததபடியே அவரில நிலைததிருபபீர்கள

* எரே. ௩௧, ௩௩—௩௪.

௨௮ இபபோதும பிளளைகளே, அவர்வெளிபபடும போது, நாம அவர்வருகையில அவராலவெடகபபடுததப படாமல தயிரியமுளளவர்களாயிருககுமபடிககு, * அவரில நிலைததிருஙகோள. * யொவ. ௰௫, ௪—௭.

௨௯ அவர் நீதிபரனெனபது உஙகளுககுததெரிநதிருநதால, நீதியைசசெயகிறவனெலலாம அவரிலபிறநதவனெனறறிநதிருககிறீர்கள.

# ௩. அதிகாரம்.

¶ தெய்வபுத்திரரின் மகிமையையும் அதற்கேற்ற பரிசுத்தத்தையுஞ் சகோதரசிநேகத்தையுங் குறித்துச்சொன்னது.

நாம் * பராபரனுடைய பிள்ளைகளென்றழைக்கப் படுவதிலே பிதா நமக்குக்கெத்தனை பெரிய சிநேகத் தை அருளினாரென்று பாருங்கோள். இதுநிமித்தியம் லோகம் நம்மையறியாது, ஏனெனில் அது அவரையறிந்த தில்லை.

* யொவ. ௧, ௰௨.

௨ பிரியமானவர்களே, இப்போது பராபரனுடைய பிள்ளைகளாயிருக்கிறோம், நாம் என்னமாயிருப்போமென்று இன்னம்வெளியரங்கமானதில்லை. *அவர் வெளிப்படும்போதோவெனில் அவருக்குச்சாயலாயிருப்போமென்கிறதை அறிந்திருக்கிறோம், ஏனெனில் அவரிருக்கிற வண்ணமாக † அவரைத்தெரிசிப்போம்.

* கொலோ. ௩, ௪. † மத. ௫, ௮.

௩ அவர்பேரிலிருந்த நம்பிக்கையை வைத்திருக்கிறவனெல்லாம், அவர்சுத்தமுள்ளவராயிருக்கிறபடியே தன்னைப்பரிசுத்திகரித்துக்கொள்ளுகிறான்.

௪ பாவத்தைச்செய்கிறவனெல்லாம் அஞ்ஞாயத்தையுஞ்செய்கிறான், பாவம் அஞ்ஞாயமே.

௫ அவர் * நம்முடையபாவங்களை நீக்கவெளிப்பட்டாரென்றறிவீர்கள், அவரிலே பாவமில்லை.

* யொவ. ௧, ௨௯.

௬ அவரில் நிலைத்திருக்கிறவனெல்லாம் பாவஞ்செய்யாதிருக்கிறான், பாவஞ்செய்கிறவனெல்லாம் அவரைக்கண்டதுமில்லை அவரையறிந்ததுமில்லை.

௭ பிள்ளைகளே, உங்களை ஆரும்மோசம்போக்கவேண்டாம், நீதியைச்செய்கிறவன் அவர்நீதியுள்ளவராயிருக்கிறதுபோல நீதியுள்ளவனாயிருக்கிறான்.

௮ பாவத்தைச்செய்கிறவன் * பிசாசினாலுண்டாயிருக்கிறான், ஏனெனில் ஆதிமுதலாய்ப்பிசாசுபாவஞ்செய்யுது; † பிசாசின்கிரியைகளைக்குலைக்கவே பராபரனுடையகுமாரன் வெளிப்பட்டார்.

* யொவ. ௮, ௪௪. † ௧. மோசே. ௩, ௰௫.

௯ * பராபரனிலபிறநதவனெலலாம பாவஞசெயயாதிருககிறான, ஏனெனில அவருடையவிதது அவனுககுளளெ தரிததிருககுது, அவனபராபரனிலபிறநதபடியால பாவஞசெயயமாடடான. * ௫, ௰௮.

௰ இதிலே, பராபரனுடையபிளளைகளுமபிசாசினுடையபிளளைகளும ஒனறினனொனறு வெளியரஙகமாகும; நீதியைசசெயயாமலுந தனசகோதரனைசசினேகியாமலுமிருககிறவனெலலாம பராபரனாலுணடானவனலல.

௰௧ ஏனெனில * நாம ஒருததரையொருததர சினெகிககவெணுமெனகிறதே நீஙகள ஆதிமுதலகொணடு அறிவிககககேடடவிசெஷம. * யொவ. ௰௩, ௩௪.

௰௨ * பொலலாஙகனாலுணடாயிருநது தனசகோதரனைககொனற காயீனைபபொலிருககவேணடாம. இவன எதினிமிததியம அவனைககொனறான, தனகிரியைகளபொலலாததுந தனசகோதரன கிரியைகளொ நீதியுளளதுமாயிருநததினிமிததியநதானே. * க. மொ. ௪, ௮.

௰௩ எனசகோதரரே, * லோகம உஙகளைபபகைததால, ஆசசரியபபடாதேயுஙகொள.

* யொவ. ௰௫, ௰௮—௨௧.

௰௪ * மரணததைவிடடு நீஙகி, சீவனுககுளளாபபடடிருககிறோமெனகிறதை நாம அறிவோம, ஏனெனில சகோதரரைசசினேகிககிறோம; சகோதரனைசசினேகியாதவன மரணததில நிலைகொணடிருககிறான. * யொவ. ௫, ௨௪.

௰௫ * தனசகோதரனைபபகைககிறவனெலலாம மனுஷகொலைபாதகனாயிருககிறான, ஆனால மனுஷகொலைபாதகனாகிய ஒருததனுககுளளும நிததியசீவன நிலைததிருககிறதிலலையெனறறிவீரகள. * மத. ௫, ௨௧—௨௨.

௰௬ * அவர நமககாகததமமுடைய சீவனைவிடடுவிடடதினாலே சினேகம இனனதெனறறிநதோம, நாமுஞசகோதரருககாகசசீவனைவிடடுவிடககடனாளிகளாயிருககிறோம. * யொவ. ௩, ௰௬. ௰௫, ௰௩.

௰௭ ஆனால எவனாகிலும லோகசீவனமுடையவனாயிருநது, * தனசகோதரனுககுககுறைசசலுணடெனறுகணடு, தன இருதயததை அவனைவிலக அடைததுககொணடால, அவனுககுளபபராபரனின்சினேகம எபபடி நிலைககும. * ௫. மொசே. ௰௫, ௭.

௰௮ என்பிள்ளைகளே, * வசனத்தினால் அல்ல நாவினாலும் அல்ல, கிரியையினாலும் உண்மையினாலும் சினேகிக்கக்கடவோம். * யாக. ௨, ௰௫—௰௬.

௰௯ இதினாலே நாம் சத்தியத்தாலுண்டாயிருக்கிறதை நாம் அறிந்திருந்து.

௨௰ இருதயம் நம்மை மோசத்தாக்கத்தீர்த்தால், நம்முடைய இருதயத்தைப் பார்க்கப் பராபரன் பெரியவராயிருந்து எல்லாத்தையும் அறிகிறாரென்று நம்முடைய இருதயங்களை அவருக்குமுன்பாக நிச்சயப்படுத்திக்கொள்ளலாம்.

௨௧ பிரியமானவர்களே, நம்முடைய இருதயம் நம்மை மோசத்தாக்கத் தீர்க்காதிருந்தால், நாம் பராபரனை நோக்கித் தைரியங்கொண்டிருந்து,

௨௨ எதைக்கேட்கிறோமோ, அதை அவரால் அடைகிறோம், ஏனெனில் அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, அவருக்குமுன்பாக ஏற்றதுகளைச் செய்கிறோம்.

௨௩ நாம் அவர்குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய நாமத்தின்பேரில் விசுவாசித்து, அவர் நமக்குக் கற்பனை தந்தபடி ஒருத்தரையொருத்தர் சினேகிக்கவேணுமென்கிறதே அவருடைய கற்பனை.

௨௪ அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவன் அவரிலும் நிலைத்திருக்கிறான், அவர் இவனிலும் நிலைத்திருக்கிறார், * அவர் நம்மில் நிலைத்திருக்கிறதையோ அவர் நமக்குத் தந்த ஆவியினாலே யறிகிறோம். * ரோம. ௮, ௯.

# ௪ அதிகாரம்.

¶ போதகரை எப்படிப்பட்டவர்களென்று சோதிக்கப்புத்திசொன்னது.

௧ பிரியமானவர்களே, * நீங்கள் எல்லா ஆவியையும் நம்பாமல் ஆவிகளைப், பராபரனாலுண்டானதுகளோவென்று சோதித்தறியுங்கோள், ஏனெனில் அனேகங்கள்ளத் தீர்க்கதெரிசிகள் லோகத்திலே புறப்பட்டார்கள்.

* மத். ௭, ௰௫—௰௬. ௨௪, ௪—௫.

௨ பராபரனுடைய ஆவியையெதினாலறிகிறீர்களென்றால், மாம்சத்திலே வந்த இயேசுகிறிஸ்துவை அறிக்கைபண்ணுகிற எல்லா ஆவியும் பராபரனாலுண்டாயிருக்குது.

௩ ஆனால் மாம்சத்திலே வந்த இயேசுகிறிஸ்துவை அறிக்கைபண்ணாத எந்த ஆவியும் பராபரனாலுண்டாயிராது. * இதுவே நீங்கள் வருகுதென்று கேட்டிருக்கிற கிறிஸ்துவுக்கெதிராளியினுடைய ஆவி, அது இப்போது தானும் லோகத்திலிருக்குது. * ௨, ௰௮—௨௨.

௪ பிள்ளைகளே, நீங்கள் பராபரனாலுண்டாயிருந்து, அவர்களைச்செயித்தீர்கள். ஏனென்றால், லோகத்திலிருக்கிறதைப்பார்க்க உங்களிலிருக்கிறவர் பெரியவர்.

௫ அவர்கள் லோகத்தாராயிருக்கிறார்கள். ஆனபடியினாலே லோகத்தாராய்ப்பேசுகிறார்கள், லோகம் அவர்களைக்கேட்குது.

௬ நாம் பராபரனாலுண்டாயிருக்கிறோம், * பராபரனை அறிகிறவன் நம்மைக்கேட்கிறான், பராபரனாலுண்டாயிராதவன் நம்மைக்கேளான். இதினாலே சத்தியத்தினுடைய ஆவியும் எத்தினுடைய ஆவியும் இன்னின்னதென்றறிகிறோம். * யோவ. ௮, ௪௭.

¶ சகோதர சிநேகத்துக்கு தெய்வசிநேகத்துக்கும் எழுப்பினது.

௭ பிரியமானவர்களே, ஒருத்தரையொருத்தர் சிநேகிக்கக்கடவோம், ஏனென்றால் சிநேகம் பராபரனாலுண்டாயிருக்குது. சிநேகிக்கிறவனெல்லாம் பராபரனிலேப்பிறந்திருந்து பராபரனை யறிகிறான்.

௮ சிநேகியாதவன் பராபரனை யறிந்ததில்லை, ஏனென்றால் பராபரன் சிநேகந்தானே.

௯ * பராபரன் தம்முடைய ஏகபேறான குமாரனை, நாம் அவர் மூலமாய்ப்பிழைக்கும்படிக்கு லோகத்தில அனுப்பினத்தினாலே நம்முடைய பேரிலுள்ள பராபரனுடைய சிநேகம் வெளியரங்கமாச்சுது. * யோவ. ௩, ௰௬.

௰ பராபரனை நாம் சிநேகித்தோமென்பதில் அல்ல, நம்மை அவர் சிநேகித்து, தம்முடைய குமாரனை நம்முடைய பாவங்களின் நிமித்தியம் கிருபையுண்டாக்குதலாக அனுப்பினதிலே சிநேகமுண்டாயிருக்குது.

